ன்னதவிகற்பமற வென்றுநிற்பதுமது
மரபென்றபிரமகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. 5

கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
கருணைசிறிதேதுமிலாக்
காட்சியுங்கொலைகளவு கட்காமமாட்சியாக்
காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாதபொய்ம்மொழியு மல்லாதுநன்மைகள்
பொருந்துகுணமேதுமறியேன்
புருஷர்வடிவானதே யல்லாதுகனவிலும்
புருஷார்த்தமேதுமில்லேன்
நல்லாமறிந்தநீ யறியாததன்றெனக்
கெவ்வண்ணமுய்வண்ணமோ
விஞ்ஞாயிருளென்றவர்க் கொளிதாரகம்பெறு
மௌனகுருநின்னருடாரகம்
வல்லானெனும்பெய ருனக்குள்ளதேயிந்த
வஞ்சகனையாளநினையாய்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. 6

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
கண்காணமதயானைநீ
கைகாட்டவுங்கையா லென்பிடிக்கெனப்பெரிய
கட்டைமிகவேர்திவருமே

சிற்றறிவதன்றியு மெவரேனுமொருமொழி
  திடுக்கென்றுரைத்தபோது
சிந்தைசெவியாகவே பறையறையவுதரவெந்
  தீயென்ஞ்சமளவளாவ
வெற்றுணரவுணர்வற்றன மத்தவெறியினர்போல
  வுளருமென் முதறிமார்க்க
முணர்வதெப்படியின்ப துன்பஞ்சமானமா
  யுறுவதெப்படியாயினும்
மற்றெனக்கையநீ சொன்னவொருவார்த்தையினை
  மலையிலக்கெனநம்பினேன்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
  மரபில்வருமௌனகுருவே.

திருச்சிற்றம்பலம்.

கருணாகரக்கடவுள்.

நிர்க்குணநிராமய நிரஞ்சனநிராலம்ப
  நிர்விஷயகைவல்யமா
நிஷ்களவசங்கசஞ் சலரகிதநிர்வசன
  நிர்த்தொந்தநித்தமுக்த
தற்பரவிஸ்வாதீத வ்யோமபரிபூரண
  சதானந்தஞானபகவ
சம்புசிவசங்கர சர்வேசவென்றுநான்
  சர்வகாலமுநினைவனோ
அற்புதவகோசர நிவர்த்திபெறுமன்பருக்
  கானந்தபூர்த்தியான

வத்துவிநிச்சய சொரூபசாக்ஷாத்கார
வனுபூதியனுகூலமுங்
கற்பனையறக்காண முக்கணுடன்வடநிழற்
கண்ணூடிருந்தகுருவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. 1

மண்ணாதியைந்தொடு புறத்திலுளகருவியும்
வாக்காதிகன்மேந்த்ரியம்
வளர்கின்றசப்தாதி மனமாதிகலையாதி
மன்னுசுத்தாதியுடனே
தொண்ணூற்றொடாறுமற் றுள்ளனவுமெளனியாய்ச்
சொன்னவொருசொற்கொண்டதே
ரவெளியதாயகண் டானந்தசுகவாரி
தோற்றுமதையென்சொல்லுவேன்
பண்ணுறுமிசைவினொடு பாடிப்படித்தருட்
பான்மைநெறிநின்றுதவறாப்
பக்குவவிசேடராய் நெக்குநெக்குருகிப்
பணிந்தெழுந்திருகைகூப்பிக்
கண்ணாறுகரைபுரள நின்றவர்களையெலாங்
கைவிடாக்காட்சியுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. 2

எல்லாமுனடிமையே யெல்லாமுனுடைமையே
யெல்லாமுனுடையசெயலே

யெங்கணும்பிறவிநீ யெனறுசொலுமியல்பென்
றிருக்காதிவேதமெல்லாஞ்
சொல்லான்முழக்கியது மிககவுபகாரமாச்
சொல்லிறந்தவரும்விண்டு
சொன்னவையுமிதைநல்ல குருவானபேருந்
தொகுத்துநெறி[illegible]
அல்லாமலில்லையென நன்றுவறிந்தே
னறிந்தபடிநின்றுசுகநா
னாதவண்ணமே யிவ்வண்ணமாயினை
னதுவுநினதருளென்னவே
கல்லாதவறிஞனுக் குள்ளேயுணர்த்தினை
கதிக்குவகையேதுபகலாய்
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. 3

பட்டப்பகற்பொழுதை யிருளென்றமருளர்தம்
பக்ஷமோவெனதுபக்ஷம்
பார்த்தவிடமெங்கணுங் கோத்தநிலைகுலையாது
பரமவெளியாகவொருசொற்
றிட்டமுடன்மௌனியா யருள்செய்திருக்கவுஞ்
சேராமலாராகநான
சிறுவீடுகட்டியது னடுசோற்றையுண்டுண்டு
தெருச்சிறியார்கள்போல
கட்டளையுறாக்கற்ற கல்வியும்விவேகமு
நன்னிலையமாகவுண்ணி

நீயென்னறுநீயென் றிரண்டில்லையெனவே
நடுவேமுளைத்தடமனைதைக்
கட்டவறியாமலே வாடினேனெப்போது
கருணைக்குறித்தாவனோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. 4

மெய்விடாநாவுள்ள மெய்யருளிருந்துநீ
மெய்யானமெய்யையெலலா
மெய்யெனவுணர்த்தியது மெய்யிதற்கையமிலை
மெய்யெதுமறியாவெறும
பொய்விடாப்பொய்யினே னுள்ளத்திருந்துதான்
பொய்யானபொய்யையெல்லாம்
பெர்ய்யெனவண்ணமே புகலவைத்தாயெனிற்
புனமையேனென்செய்குவென
மைவிடாதெழுமிலை கண்டகுருவேவிஷ்ணு
வடிவானஞானகுருவே
மலர்மேவிமறையோது நான்முகக்குருவே
மதங்கவெட்டருமின்றகுருவே
கைவிடாதேயென்ற வன்பருக்கனபாய்க்
கருத்தாடுணர்த்துகுருவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரகடவுளே. 5

பெண்ணே னுனக்கான பூசையொருவடிவிலே
பாவித்திறைஞ்சவாங்கே

பார்க்கின் றமலருடு நீயேயிருத்தியப்
    பனிமலரெடுக்கமனமும்
நண்ணேனலாமலிரு கைதான் குவிக்கவெனி
    னாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தரைக் கும்பிடாதலா
    லென் பூசைசெய்யன் முறையோ
விண்ணேவிணாதியாம் பூதமேநாதமே
    வேதமேவேதாந்தமே
மேதக்கவேள்வியே வேள்வியாம்பூமிக்குள்
    வித்தேயவித்தின் முளையே
கண்ணேகருத்தேயெ னெண்ணேயெழுத்தே
    கதிக்கானமோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
    கருணாகரக்கடவுளே. 6

சநதமும்வேதமொழி யாதொன்றுபற்றினது
    தான்வந்துமுற்றுமெனலாற்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது
    சதாநிஷ்டர்நினைவதில்லை
சிந்தையறியாக்கிது போதிப்பதல்லவே
    செப்பினும்வெகுதர்க்கமாந்
திவ்யகுணமார்க்கண்டர் சுகராதிமுனிவோர்கள்
    சித்தாந்தசித்யரலரோ
விந்த்ராதிதேவதைகள் பிரமாதிகடவுள
    ரிருக்காதிவேதமுனிவ

ஊசிகாந்தத்தினைக் கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுன்னிப்
படபடெனநெஞ்சம் பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
பனிமதிமுகத்திலே நிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானேயவானிலின்ப
மழையேமழைத்தாரை வெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்துங்
கடமையுடையதிறந்தனைய வனபரன்புகளெளிமை
கன்றெந்தனுக்கெளியையோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

இங்கற்றபடியங்கு மெனவறியுநல்லறிஞ
ரெக்காலமுமமுதவுவா
ரினஞ்சாறவரூாபொய்மை யாமிழுக்குரையா
ரிரங்குவார்கொலைகள்பயிலார்
சங்கறபசித்தரவ ருள்ளக்கருத்திலுறை
சாகூரிநீயிகபரத்துஞ்
சந்தானகற்பகத் தேவாயிருந்தே
சமஸ்தவின்பமுமுதவுவாய்
சிங்கத்தையொத்தெனைப் பாயவருவினையினைச்
சேதிக்கவருசிம்புளே

சிந்தாகுலந்திமிர மகலவருட்பானுவே
தீனனேனென்றனைப்பேறுமே
கந்தமறப்பேராசை வெள்ளத்தினைவாருநட்
ககனவட்டகப்பயலே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. 10

திருச்சிற்றம்பலம்.

---

## சித்தர்கணம்.

திக்கொடுதிகந்தமும் மனவேகமென்னவே
சென்றுழியாடி வருவீர்
செம்பொன்மகமேருவொடு குன்றமுருவென்னவே
திகழ்ந்துருவனைவளாவீர்
புக்ரமிகுசக்கரதர னென்னநிற்பீர்கையி
லுழுந்தமிழுமாசமனமா
வேரேழுகடலெலாம் பருகவல்லீரிந்த
வுலகுமயிராவதமுமே
கைக்கெளியபந்தா வெடுத்தாவிளையாடுவீர்
ககனவட்டத்தையெல்லாங்
கடுகிடையிருத்தியே யட்டகுலவெற்பையுங்
காட்டுவீர்மேலுமேலும்
மிக்கசித்திகளெலாம் வல்லநீரடிமைமுறை
விளங்கவருசித்தியிலையோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

பாட்டளிதுதைந்துவளர் கற்பகநனீழலைப்
பாரினிடைவரவழைப்பீர்
பகமதிதிசநகநிதி யிருபாரிசத்திலும்
பணிசெயுந்தொழிலாளர்போற்
கேட்டதுகொடுத்துவரு நிற்கவைப்பீர்பிச்சை
கேட்டுப்பிழைப்போரையுங்
கிரீடபதியாக்குவீர் நற்பாந்தவெள்ளமொரு
கேணிடைக்குறுகவைப்பீர்
ஓட்டினையெடுத்தரு யிரக்கெதட்டுமாற்றாக
வொளிவிடும்பொன்னாகுவீர்
குரகனுமிளைப்பாற யோகதண்டத்திலே
யுலகுசுமைபாகவருளான்
பிட்டிடவுமவல்லநீ ரெனமனக்கல்லையனன
மெழுகாககிவைபபகரிதோ
வேதாநதசித்தாநத பாரநன்னிலைபெறற
வித்தகச்சித்தர்கணமே.

பாரொடுநனீராதி யானவொருடொன்றாகவே
பற்றிலயமாகும்போழ்து
பரவெளியினமருவுவீர் கற்பாந்தவெள்ளம்
பரந்திடினதற்குமீதே
நீரினுறைவண்டாய்த் துவண்டுசிவயோகநிலை
நிற்பீர்விகற்பமாகி
நெடியமுகிலேழும் பரந்துவருஷிக்கிலோ
நிலவுமதிமண்டலமதே

னவென்னவிளங்குவீர் பிரமாதிமுடிவில்விடை
 யூர்திபிருளாலுலவுவீ
ருலகங்கள்கீழ்மேல தாகப்பெருங்காற்
 றுலாவினற்புராணையினை
மேருவெனவசையாம னிற்கவலலீருமது
 மேதக்கசித்தியெனிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே. 3

எண்ணரியபிறவிதனின் மானுடப்பிறவிதா
 னியாதினும்மரிதரிதுகா
ணிப்பிறவிதப்பினு லெப்பிறவிவாய்க்குமோ
 வேதுவருமோவறிகிலேன
கண்ணகனிலத்துநா னுளபொழுதேயருட்
 ககனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழி யானந்தமுகிலொடு
 கலந்துமதியவசமுறவே
பண்ணுவதுநன்மையிந் நிலைபதியுமட்டுமே
 பதியாயிருந்ததேகப்
பவுரிகுலையாமலே கௌரிகுண்டலியாயி
 பண்ணவிதனருளினாலே
விண்ணிலவுமதியமுத மொழியாதுபொழியவே
 வேண்டுவேனுமதடிமைநான்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே.

பொய்திகழுலகநடை யென்சொல்கேனென்சொ-
ல்கேன பொழுதுபோக்கேதெனனிலோ
பொய்யுடனித்தம் புசிப்புக்கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவமலாமலிது செயதவமதல்லவே
கண்கெட்டபோக்கும்வெளியாய்க்
கண்டதிதுவிண்டிதைக் கண்டித்துநிற்றலெக
காலமோவகையறிகிலேன்
மைதிகழுமுகிலினங் குடைநிழற்றிடவட்ட
வரையினெடுசெம்பொன் மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண்டக்கோல்
வளைந்துசயவிருதுகாட்டி
மெய்திகழுமட்டாங்க யோகபூமிக்குள்வளர்
வேந்தர்சீரகுணசாந்தரே
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

கெசதுரகமுதலான சதுரங்கமனமாதி
கேள்வியினிசைந்துநிற்பக்
கெடிகொண்டநலமாறு மும்மண்டலத்திலுங்
கிள்ளாக்குசெல்லமிக்க
தெசவிதமதாயநின்ற நாதங்களோலிடச்
சிங்காசனாதிபர்களாய்த்
திக்குத்திகந்தமும் பூரணமதிக்குடை
திகழ்ந்திடவசந்தகாலம்

இச்சயபூலர்மீதுறை மணம்போலவானந்த
மித்யமேற்கொள்ளும்வண்ண
மென்றைக்குமழியாத சிவராசயோகமா
யிந்த்ராதிதேவாகளெலாம்
விஜயஜெயஜெயவென்ன வாசிசொலவேகொலு
விருக்குநும்பெருமையெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. 6

ஆணிலேபெண்ணிலே யெனபோலவொருபேதை
யகிலத்தினமிசையுள்ளதோ
வாடியகறங்குபோ லோடியுழல்சிந்தையை
யடக்கியொருகணமேனுமயான்
காணிலேனருவுருவி லல்லாதுமௌனியாய்க
கண்மூடியோடுமூச்சைக்
கட்டிக்கலாமதியை முட்டவேமூலவெங்
கனலினையெழுப்பவிலைவும்
பூணிலேனிற்றைநாட் கற்றதுங்கேட்டதும்
போக்கிலேபோகவிட்டுப்
பொய்யுலகுயினை யுயினுங்கடையான
புன்மையேனின்னமின்னம்
விணிலேயலையாமன் மலையிலக்காகநீர்
வெளிப்படத்தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

கனலமுமெதனவுமுக் கனியெனவும்வாயூறு
 கண்டெனவுமெடியெடுத்துக்
கடவுளர்கடந்தநல வமுதமுதுமேப்போற்
 கருத்திலெழுகின்றவெல்லா
என்னதறியாமையறி வெனனுமிருபகுதியா
 லீட்டுதமிழென்றமிழினுக்
கின்னல்பகராதலக மாராமைமேலிட்
 டிருத்தலாலத்தமிழையே
சொன்னவனியாவனவன் முத்திசித்திகளெலாந்
 தோய்ந்தநெறியேபடித்தீர்
சொலலுமெனவாநீங்கள் சொன்னவவையிற்சிறி
 துதோய்ந்தகுணசாநதனெனவே
மின்னலபெறவேசொலல வசசொல்கேட்டடிமை
 மனம் விகசிப்பநிதந்தநாளோ
வேதாந்தசித்தாநத சமரசநனனிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே. 8

பொற்பினெடுகைகாலில் வள்ளுகிர்படைத்தலாற்
 போந்திடையொடுக்கமுறலாற்
பொலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு
 பூரித்தவெண்ணிர்மையால
எற்படவிளங்குகக னத்திலிமையாவிழி
 யிசைந்துமேனோக்கமுறலா
லிரவுபகலிருளான கனதந்திபடவூறி
 யிதயங்களித்திடுதலாற்... ..

பற்பலவிதங்கொண்ட புலிகலையிலுரியது
  படைத்துப்ரதாபமுறலாற்
பணிவெயில்கள் புகுதாமனெடியவான்றொடர்நெடி
  யபருமரவனங்களாரும
வெற்பினிடையுறைதலாற் றவராசசிங்கமென
  மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
  வித்தகச்சித்தர்கணமே. 9

கல்லாதபேர்களே நல்லவர்கணல்லவர்கள்
  கற்றுமறிவில்லாதவென்
கர்மத்தை யென்சொலவேன மதியையென் சொல்
  லுவேன் கைவல்யஞானநீதி
நல்லோருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
  நாட்டுவேனகர்மமொருவ
னாட்டினுலோபழைய ஞானமுக்கியமென்று
  நவிலுவேனவடமொழியிலே
வல்லானொருத்தன்வர வுநத்ராவிடத்திலே
  வந்ததாவிவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின்
  வசனங்கள்சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த
  வித்தையென்முத்திதருமோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
  வித்தகச்சித்தர்கணமே. 10

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்த மானபரம்.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக்
குணமொன் றுமொன் றிலேன்பாற்
கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனைவன
குணங்களெத்தனைகொடியபாழ்ங்
கல்லாமையெத்தனை யகந்தையெத்தனைமனக்
கள்ளமெத்தனையுள்ளசற்
காரியஞ்சொல்லிடினு மறியாமையெத்தனை
கதிக்கென் றமைத்தவருளிற்
செல்லாமையெத்தனை விர்தாகோஷ்டியெனனிலோ
செல்வமெத்தனைமுயற்சி
சிந்தையெத்தனைசலன மிந்த்ரஜாலம்போன்ற
தேகத்தில்வாஞ்சைமுதலாய்
அல்லாமையெத்தனை யமைத்தனையுனக்கடிமை
யானேனிவைக்குமாளோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

தெருளாகிமருளாகி யுழலுமனமாய்மனஞ்
சேர்ந்துவளாசித்தாகியச்
சித்தெலாஞ்சூழ்ந்தசிவ சித்தாய்விசித்ரமாய்த்
திரமாகிநானவிதப்
பொருளாகியப்பொருளை யறிபொறியுமாகியைம்
புலனுமாயைம்பூதமாய்ப்
புறமுமாயகமுமாய்த் தூரஞ்சமீபமாய்ப்
போக்கொடுவரத்துமாகி

யிருளாகியொளியாகி நன்மைதீமையுமாகி
யின்முகிநாளையாகி
யென்றுமாயொன்றுமாய்ப் பலவுமாயாவுமா
யிவையல்லவாயினனை
அருளாகிநினைறவர்க ளறிவதல்லாலொருவ
ரறிவதற்கெளிதாகுமோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. 2

மாறுபடுதர்க்கந் தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின்பொருட்டதாக
மண்டலமுமிண்டலமு மொன்முகிமனதுழல
மாலாகிநிற்கவறிவார்
வேறுப்டுவேடங்கள் கொள்ளவறிவாரொன்றை
மெணமெணன்றகம்வேறதாம்
வித்தையறிவாரமைப் போலவேசந்தைபோன்
மெய்ந்நூல்விரிககவறிவார்
சிறுபுலிபோற்சீறி மூச்சைப்பிடித்துவிழி
செக்கசசிவக்கவறிவார்
திரமென்றுதந்தம் மதத்தையேதாமதச்
செய்கைகொடுமுளறவறிவார்
ஆறுசமயங்கடொறும் வேறுவேருகிவிளை
யாடுமுனையாவரறிவா
ரண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

காயிலையுதிர்ந்தகனி சருகுபுன்மண்டிய
கடும்பசிதனக்கடைத்துங்
கார்வரையின்முழையிற்கருங்கல்போலசையாது
கண்மூடிநெடிதிருந்துந்
தீயினிடைவைகியுந் தோயமதின்மூழ்கியுந்
தேகங்களென்பெலும்பாய்த்
தெரியநின்றுஞ்சென்னி மயிர்கள்கூடாக்குருவி
தெற்றவெயிலூடிருந்தும்
வாயுவையடக்கி மனதினையடக்கி
மௌனத்திநிலையிருந்து
மதிமண்டலத்திலே கனல்செல்லவமுதுண்டு
வனமூடிருந்துமறிஞர்
ஆயுமறைமுடிவான வருணாடிஞரடிமை
யகிலத்தைநாடன்முறையோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

சுத்தமுமசுத்தமுந் துக்கசுகபேதமுந்
தொந்தமுடனிர்த்தொந்தமுந்
ஸ்தூலமொடுசூக்குமமு மாசையுநிராசையுஞ்
சொல்லுமொருசொல்லின்முடிவும்
பெத்தமொடுமுத்தியும் பாவமொடபாவமும
பேதமொடபேதநிலையும்
பெருமையொடுசிறுமையு மருமையுடனெளிமையும்
மெண்ணினுடனுனுமற்று

நித்தமுமனித்தமு மஞ்சனநிரஞ்சனமு
    நிஷ்களமுநிகழ்சகளமு
நீதியுமநீதியு மாதியொடனாதியு
    நிர்விஷயவிஷயவடிவும்
அத்தனையுநீயல்லதெ னத்தனையுமில்லையெனின
    யாங்களுனையன்றியுண்டோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே 5

காராருமாணவக் காட்டைக்களைந்தறக்
    கண்டகங்காரமெனவுங
கல்லைப்பிளந்துநெஞ் சகமானபூமிவெளி
    காணத்திருத்திமேற்
பாராதியறியாத மோனமாம்வித்தைப்
    பதித்தன்புநீராகவே
பாய்ச்சியதுபயிராகு மட்டுமாமாயைவன்
    பறவையணுகாதவண்ண
நேராகநின்றுவிளை போகம்புசித்துய்ந்த
    நின்னன்பர்கூட்டமெய்த
நினைவின்படிக்குநீ முன்னின்றுகாப்பதே
    நின்னருட்பாரமென்றும்
ஆராருமறியாத சூதானவெளியில்வெளி
    யாகின்றதுரியமயமே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே.

வானாதிபூதமா யகிலாண்டகோடியாய்
மலையாகி வளைகட லுமாய
மதியாகியிரவியாய மற்றுளவெலாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு
நானென்பதற்றிடாதே
நானென்னக்குளறி நானதிகாரியாய
நானறிந்தறியாமையாய்ப்
போனாலதிட்டவலி வெல்லவெளிதோபகற்
பொழுதுபுகுமுன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள்வான்றனை யெழுப்பவசமோவி
னிப் போதிப்பதெந்தநெறியை
யானுமெனகொடுமை யனியாயமனியாய
மார்பாலெடுத்துமொழிவே
னண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. 7

பொய்யினேன புலையினேன் கொலையினேனின்னரு
ள்புலப்படவறிந்துநிலையாப்
புன்மையேன்கல்லாத நன்மையேனன்மைபோற்
பொருளலாப்பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன வெறியனேன் சிறிய
னேன் வினையினேனென்றெனைநீ
விட்டுவிடநினைவையேற் றட்டழிவதல்லாது
வேறுகதியேதுபுகலாய்

தூய்யனைமெய்யனை யுயிரினுக்குயிரான
    துணைவனை யிணையொன்றிலாத்
துரியனைதுரியமுங் காணுவதீதனை
    சுருதிமுடிமீதிருந்த
ஐயனையப்பனை யெனுமறிஞரறிவைவிட்
    டகலாதகருணைவடிவே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே 8

எத்தனைவிதங்கடான் கற்கினுங்கேட்கினுமென்
    னிதயமுமொடுங்கவில்லை
யாதெனுமகந்தைதா னெள்ளளவுமாறவில்லை
    யாதினும்மபிமானமென்
சித்தமிசைகுடிகொண்ட தீகையொடிரக்கமென்
    சென்மத்துநானறிகிலேன்
சீலமொடுதவவிரத மொருகனவிலாயினுந்
    தரிசனங்கண்டுமறியேன்
பொய்த்தமொழியல்லான் மருந்துக்குமெய்ம்மொழி
    புகன்றிடேன்பிறர்கேட்கவே
போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள்
    பொருந்திடாப்பேதைநானே
அத்தனைக்குணக்கேடர் கண்டதாக்கேட்டதா
    வவனிமிசையுண்டோசொலா
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
    யானந்தமானபரமே. 9

எக்காலமுந் தனக கெனவொருசெயலிலா
வேழைநீயென் றிருந்திட்
டென தாவியுடல்பொருளு மௌனியாய்வந்ததனை
யேற்றநமதென றவன்றோ
பொய்க்காலதேசமும் பொய்ப்பொருளில்வாஞ்சை
யும்பொய்யுடலைமெய்யெனலும்
பொய்யுறவுபற்றலும் பொய்யாகுநானென்னல்
பொய்யினும்பொய்யாகையால்
மைக்காலிருட்டனைய விருளில்லையிருவினைகள்
வந்தேறவழியுமில்லை
மனமில்லையம்மனத் தினமில்லைவேறுமொரு
வரவில்லைபோக்குமில்லை
அக்காலமிக்கால மென்பதிலையெல்லா
மதீதமயமானதன்றோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. 10

திருச்சிற்றம்பலம்.

சுகவாரி.

இனமுதுகனிபாகு கற்கண்டுசீனிதே
[illegible]டவயேவந்
தின்பங்கொடுத்தநினை யென்னேரநின்னன்ப
ரிடையறாதுருகிநாடி
புண்ணியகருத்தினிழ் வுரைகுளறியுடலெங்கு
மோய்ந்தயர்ந்தவசமாகி

யுணர்வரியபேரின்ப வனுபூதியுணர்விலே
யுணர்வார்களுள்ளபடி காண்
கன்னிகையொருத்திசிற் றினபச்சேவம்பெண்ணினுங்
கைக்கொள்வள்பக்குவத்திற்
கணவனருள் பெறின்முனே சொன்னவாறென்னெ
னக் கருதிநகையாவளதுபோற்
சொன்னபடிகேட்குமிப் பேதைக்குநின்கருணை
தோற்றிற்சுகாரமபமாஞ்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 1

ஆனபின்வழியறியாத வென்னைத்தொடர்ந்தென்னை
யறியாதபக்குவத்தே
பாசைப்பெருக்கைப் பெருக்கிகொடுத்துநா
னற்றேனலந்தேனென
வன்புலமயங்கவே பித்தேற்றிவிட்டா
யிரங்கியொருவழியாயினு
மின்பவெளமாகவந் துள்ளங்களிக்கவே
யென்னநீகலந்ததுண்டோ
தனபருவமலருக்கு மணமுண்டுவண்டுண்டு
தண்முகைதனக்குமுண்டோ
தமியனேற்கிவ்வணந் திருவுளமிரங்காத
தன்மையாற்றனியிருந்து
துன்பமுறின்னெங்ஙனே யழியாதுநின்னன்பர்
சுகம்வந்துவாய்க்குமையாய்

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

கல்லேனுமையவொரு காலத்திலுருகுமென்
கனனெஞ்சமுருகவிலையே
கருணைக்கிணங்காத வனமையையுநான்முகன்
கற்பிக்கவொருகடவுளோ
வல்லானவகுத்தந்த வாயக்காலெனும்பெரு
வழக்குக்கிழுக்குமுண்டோ
வானமாய்நின்றின்ப மழையாயிரங்கியெனை
வாழ்விப்பதுன்பரங்காண்
பொல்லாதசேயெனிற் றாய்தள்ளனீதமோ
புகலிடம்பிறிதுமுண்டோ
பொய்வார்த்தைசொலவிலோ திருவருட்கயனுமா
புன்மையேனுவனந்தோ
சொல்லான்முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச்
சும்மாவிருக்கவருளாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

என்பெலாநெக்குடைய ரோமஞ்சிலிர்ப்பவுட
லிளகமனதழலின்மெழுகா
யிடையறாதுருகவரு மழைபோலிரங்கியே
யிருவிழிநீரிறைப்ப
அனபினான்மூர்ச்சித்த வன்பருக்கங்ஙனே
யமிர்தசஞ்சீவிபோல்வந்

ரணந்தமழைமொழிவை யுள்ளன்பிலாதவெனை
யார்ககாகவடிமைகொண்டாய்
ன்புலான்மயிர்தோ னரம்பெனபுமொய்த்திடு
புலைக்குடிலிலருவருபபுப்
பாய்யல்லவேயிதனை மெய்யென்றுநம்பியென்
புந்திசெலுமோபாழிலே
ன்பமாயலையவோ வுலகநடையையவொரு
சொற்பனத்திலும்வேண்டிலேன
த்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 4

நீர்பொருதெனுடலகாலினமுட்டைக்கவும்
வடுக்கென்றசைத்தெடுத்தால்
மைதஙதகனே தண்ணருளாநாடுவேன்
வேறொறையொருவர்கொலலின்
நேரமையோவென் முகமவாடிநிற்பதுவு
மையநின்னருளறியுமே
ஞுமெத்தப் புயந்தவனியாவென்னை
யாண்டநீகைவிடாதே
ந்நேரமென்றிலை யுடற்சுமையதாகவு
மெடுத்தாலிறக்கவென்றே
யங்கெங்குமொருதீர்வை யாயமுண்டாயினு
மிறைஞ்சுகரா...யான
தான்னீர்மையாளர்கரு மாலுடம்வருத்தவரு
...யென்றுநம்பகின்றேனை

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 5

பற்றுவனவற்றிடு நிராசையென்றொருபூமி
பற்றிப்பிடிக்குமியோகப்
பாங்கிற்பிராணலய மென்னுமொருபூமியினை
பற்றின்மனமறுமென்னவே
கற்றையஞ்சடைமௌனி தானேகனிந்தகனி
கனிவிக்கவந்தகனிபோற்
கண்டதிந்நெறியெனத் திருவுளக்கனிவினொடு
கனிவாய்திறந்துமொன்றைப்
பெற்றவனுமல்லேன் பெருந்தவனுமல்லேன்
பெருக்கத்தவித்துளறியே
பெண்ணீர்மையென்னவிரு கண்ணீரிறைத்துநான்
பேய்போலிருக்கவுலகஞ்
சுற்றிநகைசெய்யவே யலையவிட்டாயெனிற்
சொல்லவினிவாயுமுண்டோ
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 6

அரும்பொனேமணியே யெனன்பேயெனன்பான
வறிவேயெனறிவினூறு
மானந்தவெள்ளமே யென்றென்றுபாடினே
னாடினேனாடிநாடி
விரும்பியேகூவினே னுலறினேனலறினேன்
மெய்சிலிர்த்திருகைகூப்பி

விண்மாரியெனவெனிரு கண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தேனியான்
இரும்புநேர்நெஞ்சகக் கள்வனுனுமுனை
யிடைவிட்டுநினைறதுண்டோ
வென்றுநீயன்றுநா னுன்னடிமையல்லவோ
யாதேனுமறியாவெறுந்
துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதியோ
தொண்டரொடுகூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 7

பாராதியண்டங்க ளத்தனையும்வைகின்ற
பரவெளியினுண்மைகாட்டிப்
பற்றுமனவெளிகாட்டி மனவெளியினிற்றோய்ந்த
பாவியேன்பரிசுகாட்டித்
தாராளமாய்நிற்க நிச்சிந்தைகாட்டிச
சதாகாலநிட்டையெனவே
சுகசநிலைகாட்டினை சுகாதீதநிலையந்
தனைக்காட்டநாள்செல்லுமோ
காராரவெண்ணரு மனந்தகோடிகணின்று
காலூன்றிமழைபொழிதல்போற்
கால்வீசிமின்னிப் படர்ந்துபரவெளியெலாங்
கம்மியானந்தவெள்ளஞ்
சோராதுபொழியவே கருணையின்முழுங்கியே
தொண்டரைக்கூவுமுகிலே

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
 சோதியேசுகவாரியே. 8

பேதித்தசமயமோ வொன்றுசொனபடியொன்று
 பேசாதுதுறவாகியே
பேசாதபெரியோர்க ளிருவிகற்பத்திறப்
 பேசார்கள்பரமகுருவாய்ப்
போதிகுமுககணிறைநேர்மையாய்க்கைக்கொண்டு
 போதிப்பதாச்சறிவிலே
போக்குவரவறவின்ப நீககமறவசனமாப
 போதிப்பதெவரையனே
சாதித்தசாதனமு மியோகியர்கணமதென்று
 சங்கிப்பாாதலாலே
தன்னிலேதாஞ யயாந்துவிடுவோமெனத்
 தனியிருந்திடினங்ஙனே
சோதிககமனமாமை தனையேவினைவடிமை
 சுகமாவதெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
 சோதியேசுகவாரியே. 9

அண்டமுடிதன்னிலோ பகிரண்டமதனிலோ
 வலரிமண்டலநடுவிலோ
அனனடுவிலோவமிர்த மதிநடுவிலோவன்ப
 ரகமுருகிமலர்கவிகித்
தெண்டமிடவருமூர்த்தி நிலையிலோதிக்குத்
 திகந்தத்திலோவெளியிலோ

நிகழ்விந்துநாதநிலை தன்னிலோவேதாந்த
சித்தாந்தநிலைதனனிலோ
கடாடபலபொருளிலோ காணுதநிலையெனக்
கண்டசூனியமதனிலோ
காலமொருமூன்றிலோ பிறவிநிலைதன்னிலோ
கருவிகரணங்களோயந்த
தொண்டர்களிடத்திலோ நீவீற்றிருப்பது
தொழும்பனேற்குளவுபுகலாய்
சுகதநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 10

ஏகநாள்கருணைக் குறித்தாகுநாளெனவு
மென்னிதயமென்னவாட்டுதே
யென்றுசொல்லுவேன் முன்னொடுபின்மலைவறவு
மிற்றைவரையாதுபெற்றேன
பந்தமானதிலிட்ட மெழுகாகியுள்ளம்
பதைத்துப்பதைத்துருகவோ
பரமசுகமாவது பொறுப்பரியதுயரமாயப்
பலகாலுமூர்ச்சிப்பதோ
சிந்தையானதுமறிவை யெனனறிவிலறிவான
தெய்வநீயனறியுளதோ
தேகநிலையல்லவே யுடைகப்பல்கப்பலாய்த்
திரையாழியூடுசெலுமோ
சொந்தமாயாண்டநீ யடியார்கள்போலவே
துன்பதிலாழ்த்தன்முறையோ

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே 11

எந்நாளுமுடலிலே யுயிராமுனைப்போ
லிருக்கவில்லையோமனதெனு
மியானுமென்னட்பாம் பிராணனுமெமைச்சடம
தென்றுனைச்சிதமெனறுமே
அந்நாளிலெவனோ பிரித்தானதைக்கேட்ட
வனறுமுதலின்றுவரையு
மறியாயமாயெமை யடக்கிக்குறுக்கே
யடர்ந்தரசுபண்ணியெங்கண்
முனனுகநீயென்ன கோட்டைகொண்டாயென்று
மூடமனமிகவுமேசு
மூண்டெரியுமனலிட்ட மெழுகாயுளங்கருகன்
முறைமையோபதினுயிரஞ்
சொன்னலுநின்னரு ளிரங்கவில்லையயினிச்
சுகம்வருவதெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. 12

திருச்சிற்றம்பலம்.

---

## எங்குநிறைகின்ற பொருள்.

அவனன்றியோரணுவுமசையாதெனும்பெரிய
வாப்தர்மொழியொன்றுகண்டா
லறிவாவதேதுசில வறியாமையேதிவை
யறிந்தார்களறியாதவார்

மௌனமொடிருந்ததாரென்போலுடம்பெலாம்
வாயாய்ப்பிதற்றுமவரார்
மனதெனவுமொருமாயை யெங்கேயிருந்துவரும்
வன்மையொடிரககமெங்கே
புவனம்படைப்பதென் கர்த்தவியமெவ்விடம்
பூதபேதங்களெவிடம்
பொய்மெயிதமகிதமேல் வருநன்மைதீமையொடு
பொறைபொறுமையுமெவ்விடம்
எவர்சிறியரெவர்பெரிய ரெவருறவரெவர்பகைஞர்
யாதுமுணையனறியுண்டோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 1

அன்னேயனேயெனுஞ் சிலசமயநின்னையே
யையாவையாவென்னவே
யலறிடுஞ்சிலசமய மல்லாதுபேய்போல
வலறியேயொன்றுமிலவாய்ப்
பின்னேதுமறியாம லொன்றைவிட்டொன்றைப்
பிதற்றிடுஞ்சிலசமயமேற்
பேசரியவொளியென்றும் வெளியெனறுநாதாதி
பிறவுமேலயமென்றுந்
தன்னேரிலாததோ ரணுவென்றுமூவிதத்
தன்மையாங்காலமென்றுஞ்
சாற்றிடுஞ்சிலசமய மிவையாகிவேறதாய்ச்
சதானந்தமா

யெனனேயெனேகருணை விளையாட்டிருந்தவா
றெமமனோர்புகலவெளிதோ
விகபரமிரண்டினிலு முயிரினுகருயிராகி
யெஙகுநிறைகின்றபொருளே. 2

வேதமுடனுகம புராணமிதிகாசமுதல்
வேறுமுளகலைகளெல்லா
மிக்காகவத்துவித துவிதமார்க்கத்தையே
விரிவாயெடுத்துரைக்கும
ஓதரியதுவிதமே யத்துவிதஞானத்தை
யுண்டுபணுஞானமாகு
மூகமனுபவம்வசன மூனறுக்குமொவ்வுமீ
துவயவாதிகள்சம்மதம்
ஆதலினெனக்கினிச் சரியையாதிகள்போது
மியாதொன்றுபாவிக்கநா
னதுவாதலாலுன்னை நானெனறுபாவிககி
னத்துவிதமாக்கமுறலாம்
ஏதுபாவித்திடினு மதுவாகிவந்தருள்செ
யெங்தைநீகுறையுமுண்டோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 3

சொல்லான திற்சற்றும் வாராதபிள்ளையைத்
தொட்டில்வைத்தாட்டியாட்டித்
தொடையினைக்கிள்ளல்போற் சஙகற்பமொன்றிற்
றொடுக்குந்தொடுத்தழிக்கும்

பொல்லாதவாதனை யெனுஞ்சத்தபூமியிடை
போந்துதலைசுற்றியாடும்
புருஷனிலடங்காத பூவைபோற்றனே
புறம்போந்துசஞ்சரிக்குங்
கல்லோடிரும்புக்கு மிகவன்மைகாட்டிடுங
காணுதுகேட்டவெல்லாங்
கண்டதாக்காட்டியே யணுவாச்சுருக்கிடுங்
கபடநாடகசாலமோ
யெல்லாமும்வலதிந்த மனமாயையேழையா
மென்னாலடக்கவசமோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகினறபொருளே. 4

கண்ணாரநீர்மல்கி யுள்ளநெக்குருகாத
கள்ளனேனானுமோ
கைகுவித்தாடியும யாடியும்விடாமலே
கண்பனித்தாரைகாட்டி
அண்ணபரஞ்சோதி யப்பாவுனக்கடிமை
யானெனவுமேலெழுந்த
வனபாகிநாடக நடித்ததோகுறைவில்லை
யகிலமுஞ்சிறிதறியுமேற்
றண்ணருநின்னதரு ளறியாததல்லவே
சற்றேனுமினிதிராகிச்
சாக்ஷதமுத்திநிலை யீதெதன் றுணர்த்தியே
சகசநிலைதந்துவேறொன்

றெண்ணுமனுள்ளபடி சுகமாயிருக்கவே
 யேழையேற்கருள்செய்கண்டா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
 யெங்குநிறைகின்றபொருளே. 5

காகமானதுகோடி கூடிநின்றாலுமொரு
 கல்லின்முனெதிர்நிற்குமோ
கர்மமானதுகோடி முனனேசெய்தாலுநின
 கருணைப்ரவாகவருளைத்
தாகமாய்நாடினரை வாதிக்கவல்லதோ
 தமியனேற்கருட்டாகமோ
சற்றுமிலையென்பதுவும் வெளியாச்சுவினையெலாஞ்
 சங்கேதமாய்க்கூடியே
தேகமானதைமிகவும் வாட்டுதேதுன்பங்கள்
 சேராமல்யோகமார்க்க
சித்தியோவரவில்லை சகசநிட்டைக்குமென்
 சிந்தைக்கும்வெகுதூரநான்
ஏகமாய்நின்னொ டிருக்குநாளெந்தநா
 ளிந்நாளின்முற்றுறாதோ
விகபரமிண்டினிலு முயிரினுக்குயிராகி
 யெங்குநிறைகின்றபொருளே. 6

ஒருமைமனதாகியே யல்லலறநின்னருளி
 லொருவனுன்வந்திருக்கி
னுலகம்பொருளதோ மாயாவிசித்ரமென
 வோயுமோவிடமில்லையோ

அருளுடையநின்னன்பர் சங்கைசெய்திடுவரோ
வலதுகிர்த்தியகர்த்தரா
யகிலம்படைத்தெம்மை யாள்கின்றபேர்சில
ரடாதென்பரோவகன்ற
பெறுமைபெறுபூரணங் குறையுமோபூதங்கள்
பேய்க்கோலமாயவிதண்டை
பேசுமோவலதுதான் பரிபாககாலம்
பிறக்கவில்லையோதொல்லையாம்
இருமைசெறிசடவினை யெதிர்த்துவாய்பேசுமோ
வேறுளவுசிறிதுபுகலா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 7

நில்லாதுதேகமெனு நினைவுண்டுதேகநிலை
நின்றிடவுமௌனியாகி
நேரேயுபாயமொன் றருளினையையோவிதனை
நினைறனுட்டிக்கவெனுற்
கல்லாதமனமோ வொடுங்கியுபரதிபெறக்
காணவில்லையாகைபாலே
கையேற்றுணும்புசிப் பொவ்வாதெநாளுமுன்
காட்சியிலிருந்துகொண்டு
வல்லாளராயியம நியமாதிமேற்கொண்ட
மாதவர்க்கேவல்செய்து
மனதின்படிக்கெலாஞ் சித்திபெறலாஞானம்
வாய்க்குமொருமனுவெனக்கிங்

இல்லாமையொன் றினையு மில்லாமையாகவே
யிப்போதிரங்குகண்டா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 8

மரவுரியுடுத்துமலை வனநெற்கொறித்துமுதிர்
வனசருகுவாயில்வந்தால்
வன்பசிதவிர்த்துமனல் வெயிலாதிமழையால்
வருந்தியும்மூலவனலைச்
சிரமளவெழுப்பியு நீரினிடைமூழ்கியுந்
தேகநமதல்லவென்று
சிற்சுகவபேக்ஷையாய் நின்னன்பர்யோகஞ்
செலுத்தினரியாம்பாவியேம்
விரவுமறுசுவையினொடு வேண்டுவபுசித்தரையில்
வேண்டுவவெலாமுடுத்து
மேடைமாளிகையாதி வீட்டினிடைவைகியே
வேறொருவருத்தமின்றி
யிரவுபகலேழையர்கள் சையோகமாயினோ
மெய்ப்பிடிபிழைப்பதுரையா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 9

முத்தனையமூரலும் பவளவாயின்சொலு
முகத்திலகுபசுமஞ்சளு
மூர்ச்சிக்கவிரகதன மதமேற்றவிருகும்ப
முலையினமணிமாலையு

வைத்தெமைமயக்கியிரு கண்வலையைவீசியே
மாயாவிலாசமோக
வாரிதியிலாழ்த்திடும் பாழானசிற்றிடை
மடந்தையர்கள்சிற்றின்பமோ
புத்தமிர்தபோகம் புசித்துவிழியிமையாத
பொன்னாட்டும்வந்ததென்றாற்
போராட்டமல்லவோ பேரின்பமுத்தியிப்
பூமியிலிருந்துகாண
எத்தனைவிகாதம்வரு மென்றுசுகர்சென்றநெறி
யிவ்வுலகமறியாததோ
இகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. 10

உன்னிலையுமென்னிலையு மொருநிலையெனக்கிடந்
துளறிடுமவத்தையாகி
யுருவுதான்காட்டாத வாணவமுமொளிகண்
டொளிக்கின்றவிருளென்னவே
தன்னிலைமைகாட்டா தொருங்கவிருவினையினாற்
றருவுசுகதுக்கவேலை
தட்டழியமுற்றுமில் லாமாயையதனாற்
றடித்தநிலபேதமான
முன்னிலையொழிந்திட வகண்டிதாகாரமாய்
மூதறிவுமேலுதிப்ப
முன்பின்னொடுகீழ்மே னடுப்பக்கமென்னுமண்
முற்றுமானந்தநிறைவே

யென்னிலைமையாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ
 மென்னாளும்வாழிவாழி
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
 யெங்குநிறைகின்றபொருளே. 11

திருச்சிற்றம்பலம்.

---

## சச்சிதானந்தசிவம்.

பாராதிககனப் பரப்புமுண்டோவென்ற
 படர்வெளியதாகியெழுநாப்
பரிதிமதிகாணாச் சுயஞ்சோதியாயண்ட
 பகிரண்டவுயிரனைத்தும்
நேராகவறிவா யகண்டமாயேகமாய்
 நித்தமாய் நிர்த்தொந்தமாய்
நிர்க்குணவிலாசமாய் வாக்குமனமணுகாத
 நிர்மலானந்தமயமாய்ப்
பேராதுநிற்றிநீ சும்மாவிருந்துதான
 பேரின்பமெய்திடாமற்
பொய்ம்மனதையண்டியே தாயிலாப்பிள்ளைபோற்
 பித்தாகவோமனதைநான
சாராதபடியறிவி னருள்கற்பாயகமாஞ்
 சாசுவதநிட்டையருளாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
 சச்சிதானந்தசிவமே.

குடக்கொடுகுணக்காதி திக்கினையுமூக்கூடி
 கொள்ளைபோயலைந்துபூதங்

விட்டுநெறிகூட்டிடுதென மிகவுநன்றிவையன்றி
விவகாரமுண்டென்னிலோ
தனைநந்தனிச்சிறிய னாற்றிலேன்போற்றிவளர்
சன்மார்க்கமுத்திமுதலே
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. 9

வேதாவையிவ்வணம் விதித்ததேதென்னினுன்
வினைப்பகுதியென்பனந்த
வினைபேசவறியாது நிற்கவிலைமனதால்
விளைநததான்மனதைநாடிப்
போதமேநிற்குமப் போதத்தைநாடிலோ
போதமுநிலைவிளக்கம்
பொய்யெனறுதெய்வமறை யாவுமேநீயென்று
போக்குவரவறநிகழ்த்தும்
ஆதாரவாதேய முழுதுநீயாதலா
லகலமீதென்னையாட்டி
யாடல்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ
யருளுநீமௌனஞான
தாதாவுநீபெற்ற தாய்தந்தைதாமுநீ
தமருநீயாவுநீகாண்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. 10

கொந்தவிழ்மலர்ச்சோலை நன்னீழல்வைகினுங்
குளிர்தீம்புனற்கையள்ளிக்

கொள்ளுகினுமந்நீ ரிடைத்திளைத்தாடினுங்
குளிர்சந்தவாடைமடவார்
வந்துலவுகின்றதென மூன்றிலிடையுலவவே
மாசதிபெறும்போதும்வெள்ளை
வட்டமதிபட்டப் பகற்போலநிலவுதர
மகிழ்போதும் வேளையமுதம்
விதவிதபெறவறுசுவையில் வந்ததெனவமுதுண்ணு
ம் வேளையிலுமாலைகந்தம்
வெள்ளிலையடைககாய் விரும்பிவேண்டியவண்ணம்
விளையாடிவிழி துயிலினுஞ்
சந்ததமுநின்னருளை மறவாவரந்தந்து
தமியேனைரக்ஷைபுரிவாய்
சாவபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. 11

திருச்சிற்றம்பலம்.

---

## தேசோமயானந்தம்.

மருமலர்ச்சோலைநெறி நன்னீழன்மலையாதி
மனனுமுனிவர்க்கேவலாய்
மந்த்ரமாலிகைசொல்லு மியமநியமாதியா
மார்க்கத்தினின்றுகொண்டு
கருமருவுகாயத்தை நிர்மலமதாகவே
கமலாசனத்திசேர்த்துக்
காலைப்பிடித்தனலை யமண்டிகுண்டலியடிக்
கலைமதியினூடுதாக்கி

யுருகிவருமமிர்தத்தை யுண்டுண்டுறங்காம
லுணர்வானவிழியைநாடி
பொன்றேடிரண்டெனச் சமரசசொரூபசுக
முற்றிடவென்மனதின்வண்ணந்
திருவருண்முடிக்கவித் தேகமொடுகாண்பனே
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 1

இப்பிறவியெனுமோ ரிருட்கடலின்மூழ்கிநா
னென்னுமொருமகரவாய்ப்பட்
டிருவினையெனுந்திரையி னெற்றுண்டுபுற்புத
மெனக்கொங்கைவரிசைகாட்டுந்
துப்பிதழ்மடந்தையர் மயற்சண்டமாருதச்
சுழல்வந்தடிப்பச்
சோராதவாசையாங் கானாறுவானதி
சுரந்ததெனமேலுமார்ப்பக்
கைப்பரிசுகாரர்போ லறிவானவங்கமுங்
கைவிட்டுமதிமயங்கிக்
கள்ளவங்கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவிகாட்டுமெளியேன்
செப்பரியமுத்தியாங் கரைசேரவுங்கருணை
செய்வையோசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 2

தந்தைதாய்தமர் தார மகவெனுமிவையெலாஞ்
    சந்தையிற்கூட்டமிதிலோ
சந்தேகமில்லைமணி மாடமாளிகைமேடை
    சதுரங்கசேனையுடனே
வந்ததோர்வாழ்வுமோ ரிந்த்ரசாலக்கோலம்
    வஞ்சனைபொறாமைலோபம்
வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ
    வாஞ்சனையிலாதகனவே
யெந்தநாளுஞ்சரி யெனத்தேர்ந்துதேர்ந்துமே
    யிரவுபகலில்லாவிடத்
தேகமாய்நின்றநின னருள்வெள்ளமீதிலே
    யானென்பதறவுமூழ்கிச்
சிந்தைதான்றெளியாதசுழலும்வகையென்கொலோ
    தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. 3

ஆடாமலோய்ந்திட்ட பம்பரம்போல்விசை
    யடங்கிமனம்வீழநேரே
யறியாமையாகின்ற விருளகலவிருளொளியு
    மல்லாதிருந்தவெளிபோற்
கோடாதெனைக்கண் டெனக்குணிறைசார்ந்தவெளி
    கூடியின்பாதீதமுங்
கூடினேனேசரியை கிரியையின்முயன்றநெறி
    கூடினேனேவல்லனியான்

ஈடாகவேயாறு வீட்டினிரம்பிலே
யிலகிவளர்பிராணனென்னு
மிருநிதியினைக்கட்டி யோகபரனாகாம
லேழைக்குடும்பனாகித்
தேடாதழிக்கவொரு மதிவந்ததென்கொலோ
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 4

பாடாதுபாடிப் படித்தளவில்சமயமும்
பஞ்சுபடுசொல்லனிவனைப்
பார்மினோபார்மினோ வென்றுசபைகூடவும்
பரமார்த்தமிதுவென்னவே
ஆடாதுமாடிநெஞ் சுருகிநெக்காடவே
யமல்மேயேகமேயெம்
மாதியேசோதியே யெங்குநிறைகடவுளே
யபரசேயெனக்கூவிநான்
வாடாதுவாடுமென் முகவாட்டமுங்கண்டு
வாடாவெனக்கருணை நீ
வைத்திடாவண்ணமே சங்கேதமாவிந்த
வண்மையைவளர்ப்பித்ததார்
தேடாதுதேடுவோர் தேட்டற்றதேட்டமே
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 5

பிறியாதத்தன்னருட் சிவஞானியுாய்வந்து
பேசரியவாசியாலே
பேரின்பவுண்மையை யளித்தனையென்மனதறப்
பேரமபலககடவுளாய்
அறிவாயிருந்திடும நாதவொலிகாட்டியே
யமுதப்ரவாகசித்தி
யருளினையழாதுதிரு வம்பலமுமாகியெனை
யாண்டவினைய்தினெறியாய்க்
குறிதானளித்தனைநன் மரவுரிகொளந்தணக்
கோலமாயசுபாகலங்
கூறினபின்மௌனியாய்ச் சும்மாவிருக்கநெறி
கூட்டினையெலாமிருக்கச்
சிறியேனமயங்கிமிக வறிவின்மையாவனோ
தேடரியசத்தாகியென்
சிந்தமிசைக்குடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 6

ஆராமெனக்கென்ன போதித்துமென்னவென்
னறிவினைமயக்கவசமோ
வண்டகோடியையெலாங் கருப்பவறைபோலவு
மடுக்கடுக்காவுமைத்துப்
போரமனின்றபார வெளியிலேமனவெளி
பிறங்குவதலாதொன்றிலும்
பின்னமுறமருவாது நன்னயத்தாலினிப்
பேரின்பமுத்திநிலையுங்

தாராது தள்ளவும் போகாது நல்லது
    தள்ளினும்போகேனியான
றடையே துமில்லையாண்டவனடிமையென் னுமிரு
    தன்மையிலுமென்வழக்குத்
தீராதுவிடுவதில்லை நடுவானகடவுளே
    கேடரியசத்தாகியென
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. 7

கந்துகமதக்கரியை வசமாநடத்தலாங்
    கரடிவெம்புலிவாயையுங்
கட்டலாமொருசிங்க முதுகின்மேற்கொள்ளலாங்
    கட்செவியெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம்வைத் தைந்துலோகத்தையும்
    வேதித்துவிற்றுண்ணலாம்
வேறொருவர்காணாம லுலகத்துலாவலாம்
    விண்ணவரையேவல்கொளலாஞ்
சந்ததமுமிளமையொ டிருக்கலாமற்றொரு
    [illegible]
சலமேனடக்கலாங் கனன்மேலிருக்கலாந்
    தன்னிகரில்சித்திபெறலாஞ்
சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற
    திறமரிதுசத்தாகியென்
        மிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. 8

எல்லாமறிந்தவரு மேதுமறியாதவரு
மில்லையெனுமிவ்வுலகமீ
தேதுமறியாதவ னெனப்பெயர்தரித்துமிக
வேழைக்குளேழையாகிக்
கல்லாதவறிவிற் கடைப்பட்டநானன்றி
கையினுண்மைஞானங்
கற்பித்தநின்னருளி னுக்கென்னகைம்மாறு
காட்டுவேனாற்றேவனான்
அல்லார்ந்தமேனியொடு குண்டுகட்பிறையெயிற்
றுபாசவடிவமான
வந்தகாகீயொரு பகட்டாற்பகட்டுவெ
தடாதடாகாசுகம்பார்
செல்லாதடாவென்றி பேசவாயதுதந்த
செல்வமேசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 9

மின்போலுமிடையொடிய மொடியுமெனமொழிதல்
போன் மென்சிலம்பொலிகளார்ப்ப
வீங்கிப்புடைத்துவிழு சுமையன்னகொங்கைநாட
டினார்கள் பின்னேவலா
என்போலலைந்தவர்கள் கற்றார்கள்கல்லார்க
ளிருவர்களிலொருவருண்டோ
வென்செய்கேனம்மம்ம வென்பாவமென்கொடுமை
யேயென்றெடுக்குமொழிவே.

அன்பால்வியந்துருகி யடியறறமரமெனன
வடியிலேவீழ்ந்துவீழ்ந்தெம்
மடிகளேயுமதடிமை யாங்களெனுநாலவருக்
கறமாதிபொருளுரைப்பத்
தென்பாலினமுகவாகி வடவாலிருக்கின்ற
செலவமேசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 10

புத்தமிர்தபோகமுங் கற்பகநீழலிற்
பொலிவுறவிருக்குமியல்பும்
பொன்னுலகிலயிரா வதத்தேறுவரிசையும்
பூமண்டலாதிக்கமும்
மதவெறியினர்வேண்டு மாலென்றுதள்ளவுமெ
மாலுமொருகட்டுமறவே
வைக்கினறவைப்பானை மௌனதேசிகனென்ன
வந்தினனருள்வாழிகாண்
சுத்தபரிபூரண வகண்டமேயேகமே
சுருதிமுடிவானபொருளே
சொல்லரியவுயிரினிடை யங்கங்குநின்றருள்
சுரந்துபொழிகருணைமுகிலே
சித்திநிலைமுத்திநிலை விளைகின்றபூமியே
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. 11

திருச்சிற்றம்பலம்.

## சிற்சுகோதயவிலாசம்.

காகமோடுகழு கலைகைநாயநரிகள
சுற்றுசோறிடுதுருத்தியைக்
காலிரண்டுநவ வாசலபெற்றுவளர்
காமவேணடனசாலையை
மோகவாசைமுறி யிட்டபெட்டியையழு
மலமிருங்தொழுகுகேணியை
மொய்த்துவெங்கிருமி தத்துகும்பியை
* முடங்கலார்கிடைசரக்கினை
மாகவிந்த்ர தனு மினனையொததிலக
வேதமோதியகுலாலனுர்
வனையவெய்யதடி காரனையமன்
வந்தடிக்குமொருமட்கலத்
தேகமாஙபொயை மெய்யெனக்கருதி
யையமையமிசைவாடவோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.
குறிகளோடுகுண மேதுமின்றியுன
லொழுகவின்றிடுமிரும்பனற்
கூடவின்றியது வாயிருந்தபடி
கொடியவாணவமறைக்குளே
யறிவதேதுமற வறிவிலாமைமய
மாயிருக்குமெனையருளினு
ளைவிலாதநது கரணமாதியை
யளித்தபோதுனையறிந்திடாது

பெறிவிலா தவண நின்றிடா தபடி
பலநிறங்கவருமுபலமாய்ப்
பெரியமாயையி லழுந்திநின்னது
ப்ரசாதநல்லருண்மறந்திடுந்
சிறியனேனுமுனை வந்தனைந்துசுக
மாயிருப்பதினியென்றுகாண்
டெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. 2

ஐந்துபூதமொருகானனீரென
வடங்கவந்தபெருவானமே
யாதியந்தநடுவேதுமினறியரு
ளாய்நிறைந்தவொருசோதியே
தொந்தரூபமுட னரூபமாதிகுறி
குணமிறந்துவளர்வஸ்துவே
துரியமேதுரிய மியிரினுக்குணர்வு
தோன்றநின்றருள் சுபாவமே
யெந்தநாளுநடு வாகிநின்றொளிரு
மாதியேகருணைநீதியே
யெந்தையேயென விடைந்திடைந்துருகு
மெளியனேன்கவலைதீரவுஞ்
சிந்தையானதை யறிந்துநீயுணருள்
செய்யநாளுமினியுய்வனோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. 3

ஐவரென றபுல வேடர்கொட்டா
தடங்கமர்க்கடவன் முட்டியா
டவிநின றுமலை யருகினின் றாசரு
காதிநின் றபணிவெயிலினன்
மெய்வருந்துத்வ மில்லைநற்சரியை
கிரியையோகமெனுமூன றதாய்
மேவுகன்றசவு பானநனனெறி
விருமபவில்லையுலகத்திலே
பொயமுடங்குதொழில் யாதகற்குநல
சாரதித்தொழிலடைத்திடும்
புத்தியூகமறி வற்றமூகமினை
பொருளெனக்கருதுமருளன்யான்
றெய்வநல்லருள் படைத்தவன்பரொடு
சேரவுங்கருணைகூர்வையோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. 4

ஏகமான வுரு வானநீயருளி
னனேகவுருவாகியே
யெந்தநாளகில கோடிசிர்ஷ்டிசெய
விசையுநாள்வரையநாண்முத
லேகநாளது வரைக்குமுன்னடிமை
கூடவேசனனமானதோ
வனந்தமுண்டுநல சனனமீதிதனு
ளறியவேண்டுவனவறியலா

ஈறிதிரைக்கடனி கர்த்தசெலவமிக
வல்லலெனவொருவர்பின்செலா
தில்லையென்னுமுறை பேசிடாதுலகி
லெவருமாமெனமதிக்கவே
நெறியின்வைகிவளா செல்வமும்முதவி
நோய்களற்றசுகவாழ்க்கையாய்
நியமமாதிநிலை நின்றுஞானநெறி
நிட்டைகூடவுமெந்நாளுமே
அறிவினினறுகுரு வாயுணர்த்திய து
மன்றிமோனகுருவாகியே
யகிலமீதுவர வநதசீரருளை
யையவையவினியென்சொல்கேன
சிறியனேனைமுநம தடிமையென்றுனது
திருவுளத்தினிலிருந்ததோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. 7

எவ்வுயிரத்திரளு முலகிலென்னுயி
ரெனக்குழைந்துருகிநன்மையா
யிதமுரைப்பவென தென்றயாவையு
மெடுத்தெரிந்துமதயானைபோற்
கவ்வையற்றநடை பயிலவன்பரடி
கண்டதேவருளின்வடிவமாக்
கண்டயாவையு மகண்டமெனவிரு

ரய

பலவிவண்டிரை கொழித்ததண்டரளம்
　விழியுதிர்ப்பமொழிகுளறியே
பாடிபாடியுணைந்துநைந்தெழுந்து
　பாவையொத்தசைதலின்றியே
திவ்யவனபுருவமாகியன்பரொடு
　மின வீட்டினிலிருப்பனோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
　சிற்சுகோதயவிலாசமே. 8

மத்தர்பேயரொடு பாலர்தன்மைபெறு
　மருவிலேதுரியவடிவமாய்
மனனுதேசமொடு காலமாதியை
　மறந்துநினைவற பாடியிலே
பந்தியாயவொடு நடம்புமெனையொரு
　மையறந்தகிலபாவனைப்
பாருபாரென நடத்தவந்தனை
　பாரதத்திறமிதுள்ளதோ
சத்தநித்தவிமல பாகுபேதமனந்து
　விசுவமாயைநடுவாகவே
சொலலேவெண்டும்வகைநலைகாதிகளை
　சொல்லுமாயையினுமில்லையென்
சித்தமிப்படி மயங்குமோவருளை
　நம்பினோர்கள்பெறுபெறிதோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
　சிற்சுகோதயவிலாசமே. 9

பன்முகச்சமய நெறிபடைத்தவரு
மிபாங்களேகடவுளென்றிடும்
பாதகத்தவரும் வாததர்க்கமிடு
படிறருந்தலைவணங்கிடத்
தன்முகத்திலுயிர் வரவழைக்குமௌன
தருமனுமபகடுமேய்க்கியாய்த்
தனியிருப்பவட நீழலூடுவளா
சனகனாதிமுனிவோர்கடகு
சொன்மயக்கமது நீரவங்கைகொடு
மோனஞானமதுணர்த்திமே
சத்தநித்தவரு ளியல்பதாகவுள
சோமசேகரகிரபாலுவாய்த்
தென்முகத்தின்முக மாயிருந்தகொலு
வெம்முகத்துமுயவணங்குவேன்
றெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. 10

திருச்சிற்றம்பலம்.

## ஆகாரபுவனம்.

### சி த ம ப ர ர க சி ய ம்.

ஆகாரபுவனமின்பாகாரமாக
வங்ஙனேயொருமொழியாலகண்டாகார
போகானுபூதிபெற்றவன்பராவிக்
குறைதுணையேயென்னளவுமுகந்தநட்பே

வாகாரும்படிக்கிசைகிண்கிணியாயென்ன
மலர்ந்தமலரிடைவாசம்வயங்குமாபோற்
றேகாதியுலகமெங்குங்கலந்துதானே
திகழனந்தானந்தமயதெய்வக்குன்றே. 1

அனந்தபதவுயிர்கடொறுமுயிராயென்று
மானந்தநிலையாகியளவைக்கெட்டாத்
தனந்தனிச்சின்மாத்திரமாய்க்கீழ்மேல்காட்டாச்
சதசத்தாயருட்கோயிற்றழைத்ததேவே
யினம்பிரிந்தமான்போனுணிடையாவண்ண
மின்பமுறவன்பர்பக்கலிருத்திவைத்துக்
கனந்தருமாகனமேதண்ணருளிற்றோனே
கனிபலித்தவானந்தக்கட்டிப்பேறே. 2

பேறனைத்துமணுவெனவேயுதறித்தள்ளப்
பேரின்பமாகவந்தபெருக்கேபேசா
வீறனைத்துமிந்நெறிக்கேயென்னவென்னை
மேவென்றவரத்தேபாழ்வெய்யமாயைக்
கூறனைத்துங்கடந்தவெல்லைச்சேடமாகிக்
குறைவறநின்றிடுநிறைவேகுவமாநின்ற
வாறனைத்தும்புகுங்கடல்போற்சமயகோடி
யத்தனையுந்தொடர்ந்துபுகுமாதிகட்டே. 3

ஆதியந்தமெனுமெழுவாயீறற்றோங்கி
யருமறையின்னமுங்காணாதரற்றநாணு
பேதமதங்களுமலையமலைபோல்வாதப்
பெற்றியருமவாய்வாதப்பேயராகச்

நாதகமோனத்திலென்னவடவானீழற்
றண்ணருட்சந்திரமௌலீதடக்கைக்கேற்க
வேதகசின்மாத்திரமாயெம்மனோர்களும்
வெளியாகவந்தவொன்றேவிமலவாழ்வே. 4

விமலமுதற்குணமாகி நூற்றெட்டாதி
வேதமெடுத்தெடுத்துரைத்தவிருத்திக்கேற்க
அமையுமிலக்கணவடிவாயதுவும்போதா
தப்பாலுக்கப்பாலாயருட்கண்ணாகிச்
சமமுமுடன்கலப்புமகிழ்தலுமியாங்காணத்
தண்ணருடன்றெமைக்காக்குஞ்சாக்ஷிப்பேறே
யிமையளவுமுபகாரமல்லால்வேறொன்
றியக்காநிர்க்குணக்கடலாயிருந்தவொன்றே. 5

ஒன்றாகிப்பலவாகிப்பலவாககண்ட
வொளியாகிவெளியாகியுருவுமாகி
நன்றாகித்தீதாகிமற்றுமாகி
நாசமுடனுற்பத்திநண்ணுதாகி
யின்றாகிநாளையுமாய்மேலுமான
வெந்தையேயெம்மானேயெனவென்றேங்கிக்
கன்றாகிக்கதறினர்க்குச்சேதாவாகிக்
கடிதினில்வந்தருள்கூருங்கருணைவிண்ணே. 6

அருள்பழுத்தபழச்சுவையேகரும்பேதேனே
யாரமிர்தேயென்கண்ணேயரியவான

பொருளனைத்துந்தரும்பொருளேகருணைநீங்காப்
பூரணமாய்நின்றவொன்றேபுனிதவாழ்வே
கருதரியகருத்ததனுட்கருததாய்மேவிக
காலமுந்தேசமும்வகுத்துக்கருவியாதி
விரிவினையுங்கூட்டியுயிர்த்திரளையாட்டும் [ளே
விழுப்பொருளேயான்சொலுமவிண்ணப்பங்கே

விண்ணவரிந்திரன்முதலோர்நாரதாதி
விளங்குசப்தரிஷிகள்கனவீணைவல்லோ
ரெண்ணரியசித்தர்மனுவாதிவேந்த
ரிருக்காதிமறைமுனிவரெல்லாமிந்தக
கண்ணகன்ஞாலம்மதிக்கத்தானேயுள்ளங்
கையினெல்லிக்கனிபோலக்காட்சியாகத்
திண்ணியநல்லறிவாலிச்சமயத்தனேறு
செப்பரியசித்திமுத்திசேர்ந்தாரென்றும். 8

செப்பரியசமயநெறியெல்லாந்தன்றன்
றெய்வமேதெய்வமெனுஞ்செயற்கையான
அப்பரிசாளருமஃதேபிடித்தாலிப்பா
லடுத்ததந்நூல்களும்விரித்தேயனுமானாதி
வொப்பவிரித்துரைப்பரிங்ஙன்பொய்மெய்யென்ன [ம்
வொன்றிலையொன்றெனப்பார்ப்பதொவ்வாதார்க்கு
இப்பரிசாஞ்சமயமுமாயல்லவாகி
யாதுசமயமும்வணங்குமியல்பதாகி. 9

இயல்பென்றுந்திரியாமலியமமாதி
யெண்குணமுங்காட்டியன்பாலின்பமாகிப்
பயனருளப்பொருள்கள்பரிவாரமாகிப்
பண்புறவுஞ்சௌபானபக்ஷங்காட்டி
மயலறுமந்திரஞ்சிக்ஷைசோதிடாதி
மற்றங்க நூல்வணங்கமௌனமோலி
அயர்வறச்சென்னியில்வைத்துராசாங்கத்தி
லமர்ந்தது வைதிகசைவமழகிதந்தோ. 10

அந்தோவீ ததிசயமிச்சமயம்போலின
றறிஞரெல்லாநடுவறியவணிமாவாதி
வந்தாடித்திரிபவர்க்கும்பேசாமோனம
வைத்திருந்தமாதவர்க்குமற்றுமற்றும்
இந்த்ராதிபோகநலம்பெற்றபேர்கரு
மிதுவனறித்தாயகம்வேறில்லையில்லை
சந்தானகற்பகம்போலருளைக்காட்டத்
தக்கநெறியிந்நெறியேதான்சனமார்க்கம். 11

சனமார்க்கஞானமதின்பொருளும்வீறு
சமயசங்கேதப்பொருளுநதானென்றாகப்
பன்மார்க்கநெறியினிலுங்கண்டதில்லை
பகர்வரியதில்லைமன்றுட்பார்த்தபோதங்
கென்மார்க்கமிருக்குதெல்லாமவெளியேயென்ன
வெச்சமயத்தவர்களும்வந்திறைஞ்சாநிற்பர்
கன்மார்க்கநெஞ்சமுளவெனக்குந்தானே
கண்டவுடனானந்தங்காண்டலாகும். 12

காண்டல்பெறப்புறத்திலுள்ளபடியேயுள்ளுங்
காட்சிமெய்ந்நூலசொலும்பதியாங்கடவுளேநீ
நீண்டநெடுமையுமகலக்குறுக்குங்காட்டா
நிறைபரிபூரணவறிவாய்நித்தமாகி
வேண்டுவிருப்பொடுவெறுப்புச்சமீபந்தூரம்
விலகலணுகுதன்முதலாம்விவகாரங்கள்
பூண்டவளவைகணமனவாக்காதிமயலெலாம
பொருந்தாமலகம்புறமும்புணர்க்கையாகி. 13

ஆகியசற்காரியவூகத்துக்கேற்ற
வமலமாய்நடுவாகியனந்தசத்தி
போகமுறுமானந்தமயமதாகி
யுயிர்க்குயிராயெந்நாளுமோங்காநிற்ப
போகவிருண்மாயைவினையுயிர்கட்கெல்லா
மொய்த்ததென்கொலுபகாரமுயற்சியாகப்
பாகமிகவருளொருசத்திவந்து [கொல்.
பதிந்ததென்கொலெனுமப்பான்மையென

நானெனுமோரகந்தையெவர்க்கும்வந்து
நலிந்தவுடனசகமாயைநாலுவாகித்
தான்வந்துதொடருமித்தால்வளருந்துன்பச்
சாகரத்தின்பெருமையெவர்சாற்றவல்லா
ஊனென்றமுடலென்றுங்கரணமென்று
முள்ளென்றும்புறமென்றுமொழியாநின்ற
வானென்றுங்காலென்றுந்தீநீரென்று
மண்ணென்றுமலையென்றும்வனமதென்றும். 15

மலைமலையாங்காட்சிகண்காணுமையாதி
மறப்பெனறுநினைப்பென்றுமாயாவாரி
யலையலையாயடிக்குமின்பதுன்பமெனறு
மதைவிளைக்கும்வினைகளெனறுமதனைத்தீர்க்கத்
தலைபலவாஞ்சமயமென்றுநதெயவமென்றுஞ்
சாதகரென்றும்மதற்குச்சாக்ஷியாகக்
கலைபலவாநெறியென்றுநதர்க்கமென்றுங்
கடலுறுநுண்மணலெண்ணிக்காணும்போதும்.

காணரியவல்லவெல்லாநதானேகட்டுக்
கட்டாகவிளையுமதைக்கட்டோடேதான
வீணினிற்காப்பூரமலைபடுநீப்பட்ட
விந்தையெனக்காணவொருவிவேகங்காட்ட
வூணுறக்கமின்பதுன்பம்பேருராதி
யொவ்விடவுமெனைப்போலவுருவங்காட்டிக்
கோணறவோர்மான்காட்டி மானையீர்க்குங்
கொள்கையெனவருண்மௌனகுருவாய்வந்து.

வநதெனுடல்பொருளாவிமூனறுநதன்மை
வசமெனவேயததுவாமார்க்கநோக்கி
யைந்துபுலனைமபூதங்கரணமாதி
யடுத்தகுணமததனையுமலலையல்லை
யிநதவுடலறிவறியாமையுநீயல்லை
யாதொன்றுபற்றினதனியல்பாய்நின்று
பநதமறும்பளிங்கனையசித்துநீயுன்
பக்குவங்கண்டறிவிக்கும்பான்மையேயாம். 18

அறிவாகியானந்தமயமாயென்று
மழியாதநிலையாகியாதின்பாலும்
பிரியாமற்றண்ணருளேகோயிலான
பெரியபரம்பதியதனைப்பெறவேவேண்டி
னெறியாகக்கூறுவன்கேளெந்தநாளு
நிர்க்குணநிற்குளம்வாய்ததுநீடுவாழ்க
செறிவானவறியாமையெல்லாநீங்க
சிற்சுகம்பெற்றிடுகபந்தந்தீர்கவென்றே- 19

பந்தமறுமெய்ஞ்ஞானமானமோனப்
பண்பொன்றையருளியந்தப்பண்புக்கேதான்
சிந்தையிலலைநானெனும்பானமையிலலை
தேசமில்லைகாலமில்லைதிக்குமில்லை
தொந்தமில்லைநீக்கமிலலைபிரிவுமிலலை
சொல்லுமிலலையிராப்பகலாந்தோற்றமில்லை
யந்தமில்லையாதியிலலைநடுவுமில்லை
யகமுமில்லைபுறமுமிலலையனைத்துமில்லை. 20

இல்லையில்லையெனணிஞென்றுமில்லாதல்ல
வியலபாகியென்றுமுளளவியற்கையாகிச்
சொல்லரியதன்மையதாயான்றனென்னத்
தோன்றுமெதெல்லாம்விழுங்குஞ்சொரூபமாகி
யலலையுண்டபகல்போலவவித்தையெல்லா
மடையவுண்டுதடையறவுனனறிவைத்தானே
வெல்லவுண்டிங்குன்னையுந்தானுகைக்கொண்டு
வேதகமாயபேசாமைவிளக்குந்தானே. 21

தானைதன்மயமே யல்லாலொன்றைத
தலையெடுக்வொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலுங்கர்பூரதீபம்போலப்
போயொளிப்பதல்லாது புலம்வேறின்று
ஞானாகாரத்தினொடுஞேயமற்ற
ஞாதுருவுநழுவாமனழுவிநிற்கு
மானாலுமிதன்பெருமையெவர்க்காசொல்வா
ரதுவானாலதுவாவரதுவேசொல்லும். 22

அதுவென்றுமெதுவெனவொன்றடுக்குஞ்சங்கை
யாதலினாலதுவெனலுமறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ்சனகனாதி
மன்னவர்கள்சுகர்முதலோர்வாழ்ந்தாரெனறும்
பதியிந்தநிலையெனவுமென்னையாண்ட
படிகருநிருவிகற்பத்தாற்பரமானந்த
கதிகண்டுகொள்ளவுநின்னருள்கூறிநதக்
கதியன்றியுறங்கேன்மேறகருமம்பாரேல் 23

பாராதிவின்னை த்துயோச்சிநதை
பரியமடலாவெழுதிப்பாரததுப்பார்த்து
வாராயோவெனப்ராணநாதாவென்பேன்
வளைத்துவளைத்தெனைநீயாவைத்துக்கொண்டு
பூராயமாமேலொன்றறியாவண்ணம்
புண்ணாளர்போனெஞ்சம்புலம்பியுள்ளே

நீராளமாயுருகிக்கண்ணீர்சோர
நெட்டுயிர்த்துமெய்மறந்தோர்நிலையாய்நிற்பேன் 24

ஆயுமறிவாகியுன்னைப்பிரியாவண்ண
மணைந்துசுகம்பெற்றவன்ப ரையோவென்னத்
தீயகொலைச்சமயத்துஞ்செல்லச்சிந்தை
தெளிந்திடவுஞ்சமாதானஞ்செயவேன்வாழ்வான்
காயிலைபுனசருகாதிபருந்தக்கானங்
கடன்மலைபங்கேயெனவுங்கவலையாவேன்
வாயில்குப்பம்போற்கிடந்துபுரள்வேன்வானின்
மதிகதிரைமுன்னிலையாமைந்துநேரே. 25

நேரேதானிரவுபகலகோடாவண்ண
நித்தம்வரவுங்களையிந்நிலக்கேவைத்தார்
ஆரேயஙகவர்பெருமையென்னேயென்பே
னடிக்கின்றகாற்றேநீயாராலேதான
பேராதேசுழல்கின்றாயென்பேன்வந்து
பெய்கின்றமுகிலகாளெம்பெருமானும்போற்
றாராளமாக்கருணைபொழியசெய்யுஞ்
சாதகமெனனைகருதிச்சாற்றுமென்பேன். 26

கருதரியவிண்ணேநீயெங்குமாகிக்
கலந்தனையேயுனமுடிவின்காட்சியாக
வருபொருளெப்படியிருக்குஞ்சொல்லாயென்பேன்
மண்ணேயுன்முடிவிலெதுவயங்குமாங்கே

துரியவறிவுடைச்சேடனீற்றி லுண்மை
சொல்லாரோசொல்லென்பேனசுருதியேநீ
யொருவரைப்போலனைவருகருமுண் மையாமுன்
னுரையனரேவுன்முடிவையுரைநீயென்பேன். 27

உரையிறந்துபெருமைபெற்றுத்திரைக்கைநீட்டி
யொலிக்கின்றகடலேயிவ்வுலகஞ்சூழக
கரையுமினறியுன்னைவைத்தாரியாரேயென்பேன்
கானகத்திற்பைங்கிளிகாள கமலமேவும
வரிசிறைவண்டினங்காளோதிமங்காடீது
மார்க்கமன்றோநீங்களிதுவரையிலேயும்
பெரியபரிபூரணமாம்பொருளைகண்டு
பேசியதுண்டோவொருகாற்பேசுமென்பேன். 28

ஒருவனவன்யானைகெடக்குடத்துட்செங்கை
யோட்டுதலபோனூன்பேதையுப்போடப்பை
மருவவிட்டுங்கர்ப்பூரமதணிற்றீபம்
வயங்கவிட்டுமைக்கியமுன்னிவருந்திறிற்பே
னருளுடையபரமென்றேவன்றுதானே
யானுளனென்றும்மெனகேயாணவாதி
பெருகுவினைக்கட்டென்றுமென்னூற்கட்டிப்
பேசியதன்றேயருளூல்பேசிற்றனறே. 29

அன்றுமுதலின்றவரைச்சனனங்கோடி
யடைந்தடைந்திங்கியாதனையாலழிந்தகல்லால்

இன்றைவரைமுத்தியின்றேயெடுத்ததேக
மெப்போதோதெரியாதேயிப்போதேதான்
துன்றுமனக்கவலைகெடப்புலைநாயேனைத்
தொழும்புகொளச்சீகாழித்துறையேநாது
சென்றிடவேபொருளைவைத்தநாவலோய்நஞ்
சினைப்பாவென்றவருட்செல்வத்தேவே. 30

தேவர்தொழுமவாதவூர்த்தேவேயென்பேனா
திருமூலத்தேவேயிச்சகத்தோர்முத்திக்
காவலுறச்சிவவெள்ளக்குடனேவந்த
வரசேசும்மாவிருந்தானருளாச்சாரப்
பூவுலகில்வளரருணகிரியேமற்றைப்
புண்ணியர்காளோவென்பேன்புரையொன்றில்லா
வோவியம்போலசையாவுருநானேநிற்பே
னேதரியதுயர்கெடவேயுரைக்குமுன்னே. 31

ஓதரியசுகாபோதவடிவோனென்ன
வொருவரிலேபோயெனவுமுரைப்பேனருமை
பேதமபேதங்கெடவுமொருபேசாமை
பிறவாதோவாலடிபிறபெரியமோன
நாதமொருதரமுலகப்பார்க்கவிச்சை
நண்ணுணேனென்றென்றேநாணுவாகிக்
காதலிக்குமணியினைபயாரெனவாடுற்றேன்
கருத்தறிந்துபுறப்பதுன்மேற்கடன்முக்காலும். 32

காலமொடுதேசவர்த்தமானமாதி
கலந்துநின்றநிலைவாழிகருணைவாழி
மாலறவுஞ்சைவமுதன்மதங்களாகி
மதாதீதமானவருண்மரபுவாழி
சாலமிகுமெளியேனிவ்வழக்குப்பேசத்
தயவுவைத்துவளர்ததவருட்டன்மைவாழி
ஆலடியிற்பரமகுருவாழிவாழி
யகண்டிதாகாரவருளடியார்வாழி. 33

திருச்சிற்றம்பலம்.

---

## தேன்முகம்.

தேனமுகம் பிலிற்றும பைந்தாட் செய்யபங்கயத்தின்மேவு, நான்முகத் தேவேநினனு ணட்டிய வகிலமாயை, கான்முயற் கொம்பே யென்கோ கானலம் புனலே யென்கோ, வான்முக முளரியெனகோ மற்றென்கோ விளம்பல வேண்டும். 1

வேண்டுவெ படைத்தாய் நந்தை விதிப்படி புரந்தானத்தைக், காண்டக வழித்தான முககட் கடவுடானினையவாற்று, லாண்டவ னெவனோ வென்னவறிகிலா ஏகிலநீயே, யீண்டிய வல்லறீர வெம்மனோர்க்கியம்பு கண்டாய். 2

கண்டன வல்ல வென்றே கழித்திடு மிறுதிக்கண்ணே, கொண்டது பரமா னந்தக் கோதிலாமுத்தியத்தாற், பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தனமா

யை யோடே, வெண்டலை விழிகைகாலில் விளங்கிட நின்றான் யாவன். 3

விளங்கவெண்ணீறுபூசி விரிசடைக் கங்கைதாங் கித், துளங்குநன் னுதற்கண்டோன்றச் சுழல்வளிநெ டுமூச் சாகக், களங்கமி லுருவந்தானே ககனமாய்ப் பொலியப்பூமி, வளர்ந்ததா ளென்னவுள்ளமன்றெண மறையொனறின்றி. 4

மறைமுழக் கொலிப்பத் தானே வரதமோ டப யக் கைகண், முறைமையி னோங்க நாத முரசெனக் கறங்க வெங்குங், குறைவிலா வணிநிறைந்து கோதி லா நடனஞ் செய்வா, இறையவ னெனலாமியார்க்கு மிதயசம் மதமீதல்லால் 5

அல்லலாந் தொழில்படைத்தே யடிக்கடி யுருவெ டுத்தே, மல்லன்மா ஞாலங் காக்க வருபவர்கடவுளெ ன்னிற், றெல்லையாம் பிறவிவேலை தொலைந்திடா திரு ணீங்காது, நல்லது மாயை தானு நானெனவந்து நிற் கும். 6

நானென நிற்குஞான ஞானமன் றந்த ஞான, மோனமா யிருக்க வொட்டா மோனமின் றாகவே தான், றேனென ருசிக்கு மனபாற் சிந்தைநைந்துரு கும் வண்ணம், வானென நிறைந்தானந்த . மாகடல் வளாவதின்றே. 7

இன்றெனை யிருப்போ மென்னி னென்றுஞ் சூனி யமா முத்தி, நன்றொடு தீதுமன றி நாமுன்னே பெறு மவித்தை, நின்றது பெத்தந் தானே நிரந்தர முத்தி யென்னி, னொன்றொரு வரைநான்கேட்க வுணர்வி ல்லை குருவு மில்லை. 8

இல்லையென றிடினிப் பூமி யிருந்தவா றிருப்போ மென்னி, னலவன் சாருவாக னன்சொலுநெறிக்கு வீணிற், றெல்லையே யாகமாதி தொடுப்பதேன் மயக்க மேதிங், கொல்லைவந் திருமினெனன வுறவுசெய் திடு வனந்தோ. 9

அந்தணர் நாலவர் காண வருட்குரு வாகிவநத, வெந்தையே யெல்லாந் தானென றியம்பின னெமை ப்படைத்த, தநதைநீ யெம்மைக்காகருந் தலைவனே நுந்தை யன்றோ, பந்தமில் சித்திமுத்தி படைக்கநின னருள்பாலிப்பாய். 10

திருச்சிற்றம்பலம்.

---

## பன்மாலை.

பன்மாலைத்திரளிருக்கத்தமையுணர்ந்தோர்
பாமாலைக்கேநீதான்பக்ஷமென்று
நன்மாலையாவெடுத்துச்சொன்னார்நலலோர்
நலமறிந்துகல்லாதநானுஞ்சொன்னேன்
சொன்மாலைமாலையாக்கண்ணீர்சோரத்
தொண்டனேனெனனாளுந்துதித்துநிற்பே

னென்மாலையறிந்திங்கேவாவாவென்றே
யெனைக்கலப்பாய்திருககருணையெம்பிரானே. 1

கருணைமொழிசிறிதில்லேனீதனில்லேன்
கண்ணீர்கம்பலையெனறன்கருத்துக்கேற்க
வொருபொழுதும்பெற்றறியேனென்னையாரு
மொருவாவுன்னடிமைநாளொருத்தனுக்கோ
விருவினையுமுக்குணமுங்கரணநான்கு
மிடர்செயுமைம்புலனுங்காமாதியாறும்
வரவரவுமேழைகளோரட்டதான
மதத்தொடும்வந்தெதிாத்தநவவடிவமன்றே. 2

வடிவனைத்துந்தந்தவடிவில்லாசசுத்த
வான்பொருளேயெளியனேன்மனமாமாயைக்
குடிகெடுககத்துசங்கட்டிக்கொண்டமோன
குருவேயென்றெய்வமேகோதிலாத
படியெனக்கானநதவெள்ளம்வந்துதேக்கும்
படியெனக்குன்றிருக்கருணைபற்றுமாறே
யடியெடுத்தென்முடியிலினனம்வைக்கவேண்டு
மடிமுடியொன்றில்லாதவகண்டவாழ்வே. 3

வாழ்வனைத்துமயக்கமெனத்தேர்ந்தேன்றேர்ந்த
வாறேநானப்பாலோர்வழிபாராமற்
றாழ்வுபெற்றிஙகிருந்தேனீதென்னமாயந்
தடையுற்றன்மேற்கதியுந்தடையதாமே

யூழ்வலியோவல்லதுன் றன் றிருக்கூத்தோவிங்
கொருதமியேன்மேற்குறையோவுண்டாயின்னம்
பாழவதிப்படவெனக்குமுடியாதெலலாம்
படைத்தளித்துத்துடைக்கவல்லபரிசினனே. 4

நானிங்கெனுமகந்தையெனக்கேன்வைத்தாய
நல்வினை தீவினை யெனவேநடுவேநாட்டி
யூனுருமுடற்சுமையென்மீதேன்வைததா
யுயிரெனவுமெனையொன்றாயுள்ளேன்வைத்தா
யானுமையாயகிலநிலபேத
மனைத்தினுள்ளுந்தானாகியறிவானந்தத்
தேனாகிப்பாலாகிக்கனியாய்க்கன்னற்
செழுமபாகாய்க்கற்கண்டாய்த்திகழ்ந்தவொன்றே.

ஒன் றியொனறிநின் றுநின் றுமென்னையெனனை
யுன்னியுன் னும்பொருளலைநீயுன்பாலனபா
னின் றதன்மைக்கிரங்கும்வைராக்கியனல்லே
னிவர்த்தியவைவேண்டுமிந்தநிலனுக்கே
யென் றுமென் றுமிந்நெறியோர்குணமுமில்லை
யிடுக்குவாாகைப்பிள்ளையேதாயேதா
கன் றுமனத்துடனுடுதழைதினறுற்போற்
கல்வியுங்கேள்வியுமாகிக்கலக்குற்றேனே. 6

உற்றதுணை நீயல்லாற்பற்றுவேறேன்
றுன்னேன்பன்னுளுலகத்தோடியாடிக்

கற்றதுங்கேட்டதுமிதனுக்கேதுவாகுங்
    கற்பதுங்கேட்பதுமமையுங்காணுநீத
நற்றுணையேயருட்டாயேயின்பமான
    நாதாந்தபரம்பொருளேநாரணுதி
சுற்றமுமாய்நல்லனபர்தமைச்சேயாகத்
    தொழும்புகொள்ளுங்கனமேசோதிக்குன்றே.

குணமுதழுவுருவாயருவாய்ஞானக்
    கொழுந்தாகியறுசமயக்கூத்துமாடி
நின்றுயேமாயையெனுந்திரையைநீக்கி
    நின்னையாரறியவல்லார்நினைப்போர்நெஞ்ச
மன்றுகவின்பக்கூத்தாடவல்ல
    மணியேயென்கண்ணேமாமருந்தேநால்வர்க்
கன்றுலின்கீழிருந்துமோனஞான
    மமைத்தசின்முத்திரைக்கடலேயமரரேறே. 8

திரையில்லாககடல்போலச்சலனந்தீர்ந்து
    தெளிந்துருகும்பொன்போலச்செகத்தையெல்லா
கரையவேகனிந்துருக்குமுகத்திலேநீ [ங்
    கனிந்தபரமானந்தக்கட்டியிந்நாள்
வரையிலேவரக்காணேனென்றுற்கட்டி
    வார்த்தைசொன்னுற்சுகம்வருமோவஞ்சனேனை
யிரையிலேயிருத்திநிருவிகற்பமான
    வின்பநிட்டைகொடுப்பதையாவெந்நாளோ. 9

எந்தநாளுனக்கடிமையாகுநாளோ
வெந்நாளோகதிவருநாளெளியனேன்றன்
சிந்தைநாளதுவரைக்குமயங்கிற்றல்லாற் [சொற்
றெளிந்ததுண்டோமௌனியாய்த்தெளியவோர்
றந்தநாண்முதலின்பக்கால்சற்றல்லாற்
றடையறவானந்தவெள்ளந்தானேபொங்கி
வந்தநாளிலைமெத்தவலைந்தேனுனை
மறவாவின்பத்தாலேவாழ்கின்றேனே. 10

திருச்சிற்றம்பலம்.

---

## நினைவொன்று.

### ஞானிகளிடம்பொருளேவல்.

நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிட்டையரு ளொட்டுந், தனை
யென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேற்றட்டி
யெழுந் திருக்குமின்பந் தனமயமே யதுவாம், பினை
யொன்று மிலையந்த வின்பமெனு நிலயம் பெற்றாரே
பிறவாமை பெற்றார்மறந்தான, மனையென்று மக
வென்றுஞ் சுற்றமென்று மசுத்த வாதனையாமாசை
யொழி மன்னொருசொற்கொண்டே. 1

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்
தவொருமொழியே மலமொழிக்கு மொழிக்கு மென
மொழிந்த, குருமொழியே மலையிலக்குமற்றைமொழி
யெல்லாங் கோடின்றி வட்டாடல் கொள்வதொக்கும்

கண்டாய், கருமொழியின் குணக்கில்லை மொழிக்கு மொழிருசிக்கக் கரும்பனையசொற்கொடுனைக் காட்டவுங் கண்டனைமேற், றருமொழியின் குணக்கில்லை யுனைவிட்டு நீங்காத் தற்பரமா யானந்தப் பொற் பொதுவாய் நில்லே. 2

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்நே யவருண் மெய்யனன்றோ நிலயமதாநிற்கக், கல்லாதே யெனபடித்தாய் கற்றதெலலா மூடங்கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று, சொல்லாலே பய னிலலை சொன்முடிவைத் தானே தொடர்ந்துபிடி மர்க்கடமபோற் றொட்டதுபற்றுநில், லெல்லாருமறிந் திடவே வாய்பபறைகொண்டடி நீயிராப்பகலில்லா விடமேயொமங்கிடமென றறிந்தே. 3

இடம்பொருளே வலக்குறித்து மடம்புகுநாயெனவே யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீவாடா, மடம் பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசைமன்னிடமே யிடமந்தமாநிலத்தே பொருளுந், திடம்பெறவே நிற்கினெலலா வுலகமும்வந் தேவல்செய்யுமிந்த நிலை நின்றோர் சனகனமுதன் முனிவர், கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்கட்டான நிகளபநதக்கட்டவிழப் பாரே.

மோகாதி யல்லலிலே மூழ்கினையே நெஞ்சேயித்
தேகாதி மெய்யோ தெளி. 17

நோக்கற் கரிதான நுண்ணியனான் மோனநிலை,
தாககற் குபாயஞ் சமைத்தபிரான் - காக்குமுயி, ரத்
தனைக்கு நானடிமை யாதலினால யானெனதென், றித்
தனைக்கும் பேசவிட மில். 18

ஒன் றுமற நில்லென் றுணர்த்தியநம மோனகுரு,
தன் றனைத்தா ளேமூழ் தாம்வாழ்க - வென்றென்றே,
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந தன்மையர
கமே, கைக்குவரு மின்பக் கனி. 19

மனத்தாலும் வாக்காலு மன்னவொண்ணுமோன,
வினத்தாரேநல்ல வினத்தார் - கனத்தபுகழ், கொண்
டவரு மன்னவரே கூறரிய முத்திநெறி, கண்டவரு
மன்னவரே காண். 20

கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப்,
பண்ணொளிகரு முள்ளொளியாம் பான்மையினை - ந
ண்ணிடவுன, சிதத மிரங்கிலதென் சித்தந்தெளியா
வே, றித்தனைக்கு மாதரவு மில். 21

அறியாமை சாரி னலுவா யறிவா
நெறியான போததுவாய் நிற்கும் - குறியாற்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய். 22

குருலிஙக சங்கமமாக் கொண்டதிரு மேனி, கரு வொன்று மேனிநம்பாற் காட்டா-தருளென்று, கண் டவர்க்கே யானந்தங் கண்டுகொளலாமலது, கொண் டவர்க்கிங கென்ன கிடைக்கும். 23

புலியி னதளுடையான பூதப் படையான், பலியி ரந்து மெல்லாம் பரிப்பான் - மலிபுனலசேர், பொன் முடியான் முகககட் புனிதன் சரண்புகுந்தோர்க்,கென் முடியா தேதுமுளதே. 24

சொலலுக்கடங்காச் சுகப்பொருளை நாமெனவே, யல்லும் பகலு மரற்றுவதென்-னல்லசிவ, ஞானமயம் பெற்றோர்களுமில்லை யென்பரந்தோ, மோனமயமான முறை 25

ஐயா வருணகிரி யப்பா வுனைப்போல, மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்-வையகத்தோர், சாற்றரி தென் றேசற்றார் தன்னையாய் முக்கணெந்தை, நாற் றிசைக்குங் கைகாட்டினன். 26

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண் டோ, தீதற்ற காயமுமச் செய்கையே - போதமாய், நிற்பரல்லா லிச்சகத்தி னோரார்க ணோரிடினுந், தற்ப ரமாக் கண்டிருப்பார் தாம். 27

வெள்ளங் குலாவுசடை வெள்ளக்கருணையினான், கள்ளங் குலாவுவஞ்சக கள்ளனே-னுள்ளத்தி, லில்லனென லன்னவன்று னெங்கும் வியாபகத்தா,னல்லவென்றுஞ் சொலல வழக்காம். 28

தத்துவப்பேயோடே தலையடித்துக் கொள்ளாமல், வைத்த வருண்மோன வள்ளலையே-நித்தமனபு, பூணக்கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்புங், காணத்துடிக்குமிரு கண். 29

தொலலைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நாளொருவ, னெல்லையிலா நின்கருணை யெய்துவனோ - வல்லவனா, மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த, ஞான குருவே நவில். 30

மூன்றுகண்ணா முத்தொழிலா மும்முதலா மூவுல குந, தோன்றக் கருணைபொழி தோன்றலே - யீன்ற வனை, தன்னைப்போ மோலன்பு தழைததோயொரு தெய்வ, முன்னைப்போ லுண்டோ வுரை. 31

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்குளுன்னை வைத்துப், பூசிக்குந் தானிறைந்து பூரணமா-யோசித்து, நின்றத லலான் மோனு நிருவிகற்ப நிட்டைநிலை, யென்றுவரு மோவறி யேனே. 32

அறிவி லறியாமை யற்றறிவாய்நின்று, பிறிவறவா னந்தமயம பெற்றுக் - குறியவிழ்ந்தா, லன்றைக் குட ல்வேண்டே னையாவிவ் வாக்கையையே, யென்றைக் கும வேண்டுவனே யான. 33

உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல், விடவி டவே நாடுவரோ மெய்யைய - படபடென, வேண்டு வேணிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனு, ஞண்ட நீ தானேயறி. 34

அறியாயோ வென்னையுநீ யாண்டநீ சுத்த, வெறி யாய் மயங்கவுமேன விட்டாய்-நெறிமயங்கிக், குன்று ஞ்செடியுங் குறுகுமோ வையாவே, கன்றுகெட்டாற் றுயருகே காண். 35

ஏதுக் குடறசுமை கொண் டேனிருந்தே னையனே, யாதிக்க மோனவருட் டாயே - சோதியா, மன்ன நிரு விகற்ப வானந்த நிட்டையிலே, பின்னமற நில்லாத பின். 36

பின்னு முடற்சுமையாய் பேசும் வழக்கதனு
லென்னபல னுமுற் றிருந்தோமே-யன்னதனு
லானந்தந் தானேதா னுகுமெய் மையனே
யேணிநதத் துன்ப மினி. 37

துன்பக் கடலிற் றளைந்ததெல்லாந் தீரந்ததே
யின்பக் கடலி லிருமென்ன-வன்பிற்

கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்து வருமானந்த மே. 38

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த-நிரந்தரமு
நின்னையே சிந்திக்க நீ கொடுத்தாய் மோனாநா
னென்னை முழுதுங்கொடுத் தேனே. 39

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே-பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெப்பிலே யானந்தமே 40

கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுட னின்ப
மடுத்தேனே நீடூழி வாழ்ந்தே-யடுத்தேனே
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மவல்ல
லிற்றேனே யேழையடி யேன். 41

பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோ மௌனவுரைக்கக் காரியமேன-சற்றேனு
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றாற் பேசுமோ வாய். 42

காலன் றனையுதைத்தான் காமன் றனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை-ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி. 43

விண்ணருவிமேனமேல் விளங்குவபோலேயிரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்-தண்ணமிர்த,
வெள்ளமே யானந்த வெற்பே யெனத் தொழுவோ,
ருள்ளமே ஞானவொளி. 44

பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமை
யினன், கள்ளவிழும பூங்கொன்றைக் கண்ணியா-
னுள்ளபடி, கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னேர்வ
சன, மெல்லாரு மீடேறவே. 45

புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
யலமந் துழலு மடிமை-நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானு லுண்டோ பிறப்பு 46

நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்-பிறையணிந்த
மிக்கசை லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு 47

துங்கமழு மானுடையாய் சூலப்படையுடையாய்,
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய் - மங்கை
யொரு, பானுடையாய செங்கட் பணியாயென்சென
னியின்மேற், கானுடையாய் நீயே கதி. 48

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி-தனிமுதலவ

னித்தன் பரம னிமலநிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றாந் துணை. 49

நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெல்லாம் போதித்தா-னேதில்
சனகாதியாம் தவத்தோர்க்கு ஞான
தினகரனு மோன சிவன். 50

தேகச் செயறுனுஞ் சிந்தையுடனே குழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ-மோகநிலை
யல்லலிலே வாழ்வாரோ வப்பனே நீயற்ற
வெல்லையிலே சும்மா விரு. 51

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
யிம்மாயா யோகமினி யேனடா-தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ. 52

நீயற்ற வந்நிலையே நிட்டையதி னீயிலையோ
வாயற்றவனே மயங்காதே-போயற்
றிருந்தாலு நீபோகா யெனறுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யினபமுண்டு வா. 53

வாவாவென் றின்பம்வரவழைக்குநகண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே-நீவாடா
வெல்லா நபக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லா யதுவே நினை. 54

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொலலாப் பொருட்டிரளைச் சொலலாதே-கல்லாத
சிந்தை குழைந்துசுகஞ் சேரகுருவருளால்
வந்தவழி நல்ல வழி. 55

வழியிதென்று மல்லா வழியிதென்றுஞ் சொல்
லிற், பழிபழியா நல்லருளாற் பார்த்தோர் - மொழி
யுனக்கே, யேற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும்
பெருவெளியாம, பார்த்தவிடமெல்லாநீ பார். 56

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப்பிள்
ளையைப்போ, லாருந்துறக்கை யரிதரிது-நேரே, மன
த்துறவு மப்படியே மாணுவிவறறி, னுனக்கிசைந்த
வாறென்றே யோர். 57

ஓராமலே யொருகா லுனனுமை னுள்ளொளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்-வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான். 58

தானுன தன்மைவந்து தாக்கினு லவ்விடத்தே
வானுதி மாயை வழங்காதோ-ஞானுகே
ருனனுள்ளே தோன்று வுறவாகி நின்றதென
வென்னுள்ளே யென்று மிரு. 59

என்னையுன்னை யின்னதிது வென்னுமை னிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தி-லன்னைபெற்ற

பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
யுள்ளத்தி னுள்ளே யுணர். 60

சொன்னவர்தாநிட்டை தொகுத்திராநிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமௌனன்-றன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்கவட நீழ
விருப்பா னிருவிகற்பத் தே. 61

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்-வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்லா
லாடுவதே னாட்டு மவன். 62

அவனே பரமு மவனே குருவு
மவனே யகில மனைத்து-மவனேதா
மானவரே சொன்னா லவரே குருவெனக்கு
நானவனாய நிற்பதெநத நாள். 63

நாளவங்கள் போகாம னாடோறு நந்தமையே
யாளவந்தார் தாளின்கீழாட்புகுநதாய்-மீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தா னெஞ்சேயுன்
னாட்டானா னையமில்லை யால. 64

யான்றானெனலறவே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைததமொழி கொள்ளாயோ-தோனறி
யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
வழுக்கடிக்கும் வண்ணாபோ லாய். 65

எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே-யங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம. 66

மெய்யைப்பொய் யெனறிடவு மெய்யனையாப்
பொய்நெஞ்சே, பொய்யைததான் மெய்யெனவும
போகுமோ-வையமறத் தனமயத்தை மெய்யெனவே
சார்ந்தனையேலானந்த, மெனமமபமுநின்மயமுமே. 67

பூங்கா வனங்கிழலும் புததமுதுஞ் சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையு-நீங்காவாஞ்
சொல்லிறந்துமாண்டவர்போற் றாமௌனபூமியினு
னில்லை யெனநின்ற விடம். 68

இடம்வான நலலபொரு ளின்பமெனக்கேவ
லடங்காக் கருவி யனைத்து-முடனுதவ
மந்தார தாருவென வந்து மவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான். 69

தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
யானவையெல் லாந்தாமே யாகுமே-மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமாயிருமனமே
யின்னமயக்க முனக் கேன். 70

உன்னை யுடலையுறு பொருளைத் தாவெனவே
யென்னை யடிமைக் கிருத்தினன்-சொன்னவொரு

சொல்லை மறவாமற் சேர்ந்தா னெஞ்சேயுன்று
மில்லை பிறப்ப தெனக்கே. 71

எனக்கு முனக்குமுற வில்லையெனத் தேர்ந்து
நினைககவரி தானவின்ப நிட்டை-தனைக்கொடுத்தே
யாசான் மவுனி யளித்தானெஞ் சேயுனையோர்
காசா மதியேனுங் காண் 72

ஆனந்த மோனகுரு வாமெனவே யென்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதாற்-றேனுந்து
சொல்லெல்லா மோனந் தொழிலா தியமோன
மெல்லாநன் மோன வடிவே 73

எல்லாமே மோனநிறை வெய்துதலாலெவ்விடத்து
நல்லார்கண் மோனநிலை நாடினார்-பொல்லாத
நானெனவிங் கொனறை நடுவேமுளைக்க விட்டிங்
கேனலைந்தேன மோனகுரு வே. 74

மோன குருவளித்த மோனமே யானந்த
ஞான வருளுமது நானுமது-வானாதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
வென்றறிந்தே னானந்த மே. 75

அறிந்தவறி வெல்லா மறிவன்றி யில்லை
மறிந்தமன மற்ற மவுனஞ்-செறிந்திடவே
நாட்டினா னானந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினான் மோன குரு. 76

குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோன
வுருநீ டுயிர்பொருளு மொக்கத் - தருதியென
வாங்கினையே வேறுமுண்மை வைததிடவுங் கேட்டி
யீங்கொருவ ருண்டோ வினி. [டவு

இனிய கருப்புவட்டை யென்னுவி லிட்டா
னனியிரத மாறுது நானுந்-தனியிருகக
பெற்றிலேன்மோனம் பிறந்தவன்றே மோனமல்லாற்
கற்றிலே னேதுங் கதி. 78

ஏதுக்குஞ் சும்மா விருநீயென வுரைத்த
சூதுக்கோ தோன்றுத துணையாகிப்-போதித்து
நின்றதற்கோ வென்னையா னீககிப் பிரியாமற்
கொன்றதற்கோ பேசாக் குறி. 79

குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட வாங்கே-பிறிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோன நினபாற்
கைம்மாறு நானெழிதல் காண். 80

நானறு மெனனுமயகக நணணுஙகா லெனனுணை
வான்று னெனநிறைய மாட்டாய்நீ-யூன்றுமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறநது
துய்த்துவிடு ஞான சுகம். 81

ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு-மானமொடு

தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு வென்சிந்தைக்
கோயிலென வாழுங் குரு. 82

சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசததாற்-சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
கற்றோமே மோனக் கரு. 83

திருச்சிற்றம்பலம்.

## ஏசற்றவந்நிலை.

### கொச்சகக்கலிப்பா.

ஏசற்றவநநிலையேயெந்தைபரிபூரணமாய்
மாசற்றவானந்தவாரிவழங்கிடுமே
யூசற்சுழல்போ லுலகநெறிவாதனையாற்
பாசத்துட்செல்லாதேபல்கா லும்பாழ்நெஞ்சே. 1

பாழாகியண்டப்பரப்பையெல்லாம்வாய்மடுத்து
மாழாழியின்பத்தழுந்தப்படியாயோ [போல்
தாழாயோவெந்தையருட்டாட்கீழ்நெஞ்சேயெனைப்
வாழாதுவாழ்ந்தழியாவண்ணமிருப்பாயே. 2

இருப்பாயிருந்திடப்பேரின்பவெளிக்கேநமக்குக்
குருப்பார்வையல்லாமற்கூட்க்கிடைத்திடுமோ
வருட்பாய்நமக்காகவாளவந்தார்பொன்னடிக்கீழ்
மருட்பேயர்போலிருக்கவாகண்டாய்வஞ்சநெஞ்சே. 3

வஞ்சமோபண்டையுளவாதனையானீயலைந்து
கொஞ்சமுற்றுயுன்னைக்குறைசொலலவாயுமுண்
வஞ்சலஞ்சலென்றிரங்குமானந்தமாகடற்கீழ் [டோ
நெஞ்சமேயென்போலநீயமுந்தவாராயோ. 4

வாராவரவாய்வடநிழற்கீழ்வீற்றிருந்த
பூராயநம்மைப்புலப்படுத்தவேண்டியன்றே
வோராயோநெஞ்சேயுருகாயோவுற்றிருந்து
பாராயோவவ்வுருவைப்பார்க்கநிறைவாய்விடுமே. 5

வாயாதோவின்பவெள்ளம்வந்துன்வழியாகப்
பாயாதோநானும்பயிராய்ப்பிழையேனோ
வோயாமலுன்னியுருகுநெஞ்சேயங்கிலைக்கே
தாயானமோனனருள்சந்திக்கவந்திடுமே. 6

வந்தவரவைமறந்துலகாய்வாழ்ந்துகன்ம
பந்தமுறவுன்னைப்படிப்பிக்கக்கற்றவர்யா
ரிந்தமதியேனுனக்கிங்கென்மதிகேளொன்றலே
சந்தநெஞ்சேபரத்திற்சாரினின்பமுண்டாமே. 7

இன்பமயமாயுலகமெல்லாம்பிழைப்பதற்குன்
னன்புநிலையென்பாரதுவுநினையன்றியுண்டோ
வுன்புலத்தையோரின்றுட்கொப்பாவாய்நெஞ்சேநீ
தெனபுலத்தாரோடிருந்துசெய்பூசைகொண்டருளே.

அருளேயோராலயமாவானந்தமாயிருந்த
பொருளோடியானிருக்கப்போயொளித்தநெஞ்சேநீ
மருடீர்முயற்கோடோவான்மலரோபேய்த்தேரோ
விருடீர்நீயுறைந்ததெவ்விடமோகாணேனே. 9

எவ்விடத்துமபூரணமா மெந்தைபிரான் றண்ணருளே, யவ்விடத்தேயுன்னைநெஞ்சே யாராயிற்கண்டிலனே, யவ்விடத்துமாயையிலே மாண்டனையோவவ்விடமுஞ், செவ்விடமேநீயுஞ் செனனமற்றுவாழியவே. 10

திருச்சிற்றம்பலம்.

## காடுங்கரையும்.

காடுங் கரையு மனக்குரங்கு கால்விட்டோடவதன்பிறகே, யோடுந் தொழிலாற் பயனுளதோவொன்றாய்ப் பலவா யுயிர்க்குயிரா, யாடுங் கருணைப் பரஞ்சோதி யருளைப் பெறுதற்கன்புநிலை, தேடும் பருவமிதுகண்டீர் சேரவாருஞ்செகத்தீரே. 1

சைவசமயமேசமயஞ் சமயாதீதப்பழம்பொருளைக், கைவந்திடவேமன்றுள்வெளிகாட்டு மிந்தக்கருத்தைவிட்டுப், பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந், தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே. 2

காகமுறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டாகார சிவ, போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா, யேக வுருவாய்க் கிடக்குதை யோவின்புற் றிடநா மினியெடுத்த, தேகம விழு முன புசிப்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே. 3

திருச்சிற்றம்பலம்.

---

## எடுத்ததேகம்.

### கட்டளைக்கலிப்பா.

எடுத்த தேகம் பொருளாவி மூன்றுநீ யெனக் கொன்றில்லை யெனமோன நன்னெறி, கொடுத்த போது கொடுத்ததன் றோபினுங் குளறி நானென் றுகூத்தாட மாயையை, விடுத்தவா றுங்கண்ணீரொடு கம்பலை விலகு மாறுமென் வேட்கைப்ர வாகத்தைத், தடுத்தவாறும் புகலாய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே 1

நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின் னூலிற் சொன்ன முறையிய மாதிநான், றோயும் வண்ணமெ னைக்காக்குங் காவலுந்தொழும்பு கொள்ளுஞ்சுவாமியு நீகண்டா, யோயுஞ்சன்ம மினியஞ் சலஞ்சலென் றுலகங் கண்டு தொழுவோருருவிலே, தாயுந்தந்தையு மானோய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே. 2

திருச்சிற்றம்பலம்.

## முகமேலாம்.

முகமெலாங்கணீர் முத்தரும்பிடச் செங்கைமுகி ழ்பப, வகமெலாங்குழைந் தானந்தமாகநல்லறிஞு, ரிக மெலாந்தவ மிழைக்கின்ற ரென்செய்கோவேழை, சக மெலாம்பெற நல்லருளுதரமாச் சமைந்தோய். 1

திருச்சிற்றம்பலம்.

---

## திடமுறவே.

### கொச்சகக்கலிப்பா.

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத் தாளக, கடனுனகெனவெறண்ணி நினைக்கைகுவி த்தோ னலனே, வடைவுகெட்ட பாழ்மாயை யாழி யிலே யின்னமலலற், படமுடியா தெனனுவிப் பற் றேபராபரமே. 1

ஆராமைகண்டிஙகருட்குருவாய்நீயொருகால்
வாறுயோவந்துவருததமெல்லாந்தீராயோ
பூராயமாகவருட்பூரணத்திலண்டமுதற்
பாராதிவைத்தபதியேபராபரமே. 2

வாழாதுவாழவுனை வந்தடைந்தோரெல்லாரு
மாழாழியென்னவருளாறுரமுக்காற்றே
டேழாயெனவுலகமேகமினிநாஞெருவன்
பாழாகாவாறுமுக்ம்பார்நீபராபரமே. 3

உள்ளத்திலுள்ளே யொளித்தென்னையாட்டுகின்ற
கள்ளக்கருணையையான்காணுந்தரமாமோ

வெள்ளத்தைமாற்றிவிடக்குண்பார்நஞ்சூட்டும்
பளளத்தின்மீன்போற்பதைத்தேன்பராபரமே. 4

வாவிக்கமலமலர் வண்டாய்த் துவண்டு துவண், டாவிக்கு ணின்றவுனக கன்பு வைத்தார்ககஞ்சலெ ன்பாய், பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போபோ லவொன்றைப், பாவிக்க மாட்டேன பதியே பரா பரமே. 5.

விண்ணுறுவெற்பினவிழுந தாங்கெனமார்பிற்
கண்ணுறுபாய்ச்சிடுமெனகாதல வெள்ளங்கண்டிலை
தண்ணுறுசாந்தபதத்தற்பரமேநால்வேதப் [யோ
டண்ணுறுமின்பப்பதியேபராபரமே. 6

கூடியநின்சீரடியார்கூட்டமென்றேவாய்க்குமென
வாடியவெனனெஞ்சுமுகவாட்டமுநீகண்டிலையோ
தேடியநின்சீரருளைத்திக்கனைத்துங்கைகுவித்துப்
பாடியநான்கண்டாய்பதியேபராபரமே. 7

நெஞ்சத்திநூடேநினைவாய்நினை வூடு
மஞ்சலெனவாழுமெனதாவித்துணைநீயே
சஞ்சலமாற்றினையினிமேற்றாய்க்குபசாரம்புகன்று
பஞ்சரிக்கநாணுர்பதியேபராபரமே. 8

புத்திநெறியாகவுனைப்போற்றிப்பலகாலு
முத்திநெறிவேண்டாதமூடனேனுங்கெடுவேன்
சித்திநெறிக்கென்கடவேன்சீரடியார்க்கேவல்செயும்
பத்திநெறிக்கெனுமுகம்பார்நீபராபரமே. 9

கண்டறியேன்கேட்டறியேன் காட்டுநினையேயித யங்கொண்டறியேன்முத்தி குறிக்குந்தரமுமுண்டோ, தொண்டறியாப் பேதைமையேன் சொலலே னின் றனமை யெல்லாம், பண்டறிவாய் நீயேபக ராய்பராபரமே. 10

திருச்சிற்றம்பலம்.

---

## த ன் னை.

### கட்டளைக்கலிப்பா.

தன்னையறியத்தனதருளாற்றுணுணர்த்து
மன்னைபொருளெனவேவாழாமற்பாழ்நெஞ்சே
பொன்னைப்புவியைமடப்பூவையரைமெய்யெனவே
யென்னைக்கவாந்திழுத்திட்டென்னபலனகண்டாயே.

திருச்சிற்றம்பலம்.

---

## ஆ க் கை வ.

ஆக்குவைமாயையாவுநொடியினிலவற்றைமாள
நீக்குவநீக்கமில்லாநினைப்பொடுமறப்புமாற்றிப்
போக்கொடுவரவுமின்றிப்புனிதநல்லருளானந்தந்
தாக்கவுஞ்செய்வாயன்றேசச்சிதானநதவாழ்வே. 1

திருச்சிற்றம்பலம்.

## கற்புறுசிந்தை.

கற்புறுசிந்தைமாதர்கணவரையன்றிவேறு
ரிற்புறத்தவரைநாடார்யூரங்களும்பின்பவாழ்வுந்
தற்பொறியாகநல்குந்தலைவநின்னலதோர்தெய்வம்
பொறபுறக்கருதோங்கண்டாய்பூரணானந்தவாழ்வே. 1

முருந்திளநகையார்பாரமுலைமுகந்தழுவிச்செவ்வாய
விருந்தமிர்தெனவருந்திவெறியாட்டுக்காளாய்நாளு
மிருநதலோகாயதப்பேரினத்தனுயிருந்தவேமை
பொருந்தவுங்கதிமேலுண்டோபூரணானந்தவாழ்வே. 2

தீதெலாமொன்றும்வனமை செறிந்திருட்படலம்
பூதகசிநதைபெற்றபதகனுணபாதநீழ [போர்த்த
லாதரவடையவுள்ளனபருள்கிலையாயின்மற்றியார்
போதனைசெய்யவல்லார்பூரணானந்தவாழ்வே. 3

நாதனைநாதாதீதநண்பனைநடுவாய்நின்ற
நீதனைக்கலந்துநிற்கநெஞ்சமேநீவாவென்றால் [ர்க்க
வாதனைபெருக்கியென்னை வசஞ்செய்துமனந்துன்மா
போதனைசெய்தனனறேபூரணானந்தவாழ்வே. 4

எண்ணியவெண்ணமெல்லா மிறப்புமேற்பிறப்புக்
காசை, பண்ணியென்னறிவையெல்லாம் பாழாக்கி
யெனைப்பாழாக்குந், திண்ணியவினையைக் கொன்று

சிறியனை யுய்யக்கொண்டாற், புண்ணியநினக்கேய ன்றோ பூரணானந்தவாழ்வே. 5

பத்திநீபத்திக்கானபலனுநீபலவாச்சொல்லுஞ்
சித்திநீசித்தர்சித்தித்திறமுநீதிறமார்மோன
முத்திநீமுத்திக்கானமுதலுநீமுதன்மையான
புத்திநீயெனக்கொன்றுண்டோ பூரணானந்தவாழ்வே.

தாயினுமினியநின்னைச் சரணென வடைந்தநா யேன், பேயினுங்கடையனாகிப் பிதற்றுதல்செய்தனன் றோ; தீயிடைமெழுகாயநொந்தேன் றெளிவிலேனா வீணேகாலம், போயினதாற்றகில்லேன் பூரணானந்த வாழ்வே. 7

திருச்சிற்றம்பலம்.

---

மலைவளர்காதலி.

பதியுண்டுநிதியுண்டுபுத்திரர்கண்மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டுதவிசுண்டுதிட்டாந்தமாகயம
படரெனுந்திமிரமணுகாக்
கதியுண்டுஞானமாங்கதிருண்டுசதிருண்டு
காயசித்திகளுமுண்டு
கறையுண்டகண்டர்பாலம்மைநின்றுளிற்
கருத்தொன்றுமுண்டாகுமே

ணதியுண்டகடலெனச்சமயத்தையுண்டபர
ஞானவானந்தவொளியே
நாதாந்தரூபமேவேதாந்தமோனமே
நானெனுமகந்தைதீர்த்தென்
மதியுண்டமதியானமதிவதனவல்லியே
மதுசூதனன்றங்கையே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே 1

தெட்டிலேவலியமடமாதர்வாய்வெட்டிலே
சிற்றிடையிலேநடையிலே
சேலொத்தவிழியிலேபாலொத்தமொழியிலே
சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டுபட்டிலேபுனைகந்த
பொடியிலேயடியிலேமேற்
பூரித்தமுலையிலேநிற்கின்றநிலையிலே
புந்திதனைநுழையவிட்டு
நெட்டிலேயலையாமலறிவிலேபொறையிலே
நின்னடியர்கூட்டத்திலே
நிலைபெற்றவன்பிலேமலைவற்றமெஞ்ஞான
நேயத்திலேயுனிருதாண்
மட்டிலேமனதுசெலநினதருளுமருள்வையோ
வளமருவுதேவைபரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. 2

பாகமோபெறவுனைப் பாடவறியேன்மல
 பரிபாகம்வரவுமனதிற்
பண்புமோசற்றுமிலை நியமமோசெய்திடப்
 பாவியேன்பாபரூப
தேகமோதிடமில்லை ஞானமோகனவிலுஞ்
 சிந்தியேனபேரின்பமோ
சேரவெனமுற்கள்ள மனதுமோமெத்தவுஞ்
 சிந்திக்குதென்செய்குவேன்
மோகமோமதமோ குரோதமோலோபமோ
 முற்றுமாற்சரியமோதான
முறியிட்டெனைக்கொள்ளு நிதியமோதேடவெனின்
 மூசுவரிவண்டுபோல
மாகமோடவும்வலல னெனையாளவல்லையோ
 வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
 வளர்காதலிப்பெண்ணுமையே. 6

தூளேறுதூசுபோல் வினையேறுமெய்யெனுந்
 தொக்கினுட்சிக்கிநாளுஞ்
சுழலேறுகாற்றினிடை யழலேறுபஞ்செனச்
 சூறையிட் டிவையெல்லா
நீளேறநாளேற வார்த்திகமெனுங்கூற்றி

வேளேறு தந்தியைக் கனதந்தியுடன்வென்று
விரையேறுமாலைசூடி
விண்ணேறுமேகங்கள் வெற்பேறிமறைவுற
வெருட்டியகருங்கூந்தலாய்
வாளேறுகண்ணியே விடையேறுமெம்பிரான்
மனதுக்கிசைந்தமயிலே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. 7

பூதமொடுபழகிவள ரிந்திரியமாம்பேய்கள்
புந்திமுதலானபேய்கள்
போராடுகோபாதி ராக்ஷசப்பேய்களென்
போதத்தையுடழித்து
வேதனைவளர்த்திடச் சதுர்வேதவஞ்சன்
விதித்தானிவ்வல்லலெல்லாம்
மும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய
வித்தைதனையியந்தருள்வையோ
தவடிவாகிய மஹாமந்த்ரரூபியே
நாதாந்தவெட்டவெளியே
சமயமானபயிர் தழையவருமேகமே
ஞானவானந்தமயிலே
தமிடுபரசமயம் யாவுக்குமெண்ணர்வரிய
மகிமைபெருபெரியபொருளே

## அகிலாண்டநாயகி.

### சந்தவிருத்தம்.

வட்டமிட்டொளிர்பிராணவாயுவெனு
　ஙிகளமோடுகமனஞ்செயு
மனமெனும்பெரியமத்தயானையையென்
　வசமடக்கிடின்முமண்டலத்
திட்டமுற்றவளராஜயோகமிவன
　யோகமெனறறிஞர்புகழுவே
யேழையேனுலகிணீடுவாழ்வனினி
　யிங்கிதற்குமனுமானமோ
பட்டவர்த்தனர்பராவுசக்ரதர
　பாக்யமானசுகயோகமும்
பரகாவியகவித்வநானமறை
　பாராயணஞ்செய்மதியூகமு
மட்டசித்தியுநலன்பருக்கருள
　விருதுகட்டியபொனன்னமே
அண்டகோடிபுகழ்காவைவாழுமகி
　லாண்டநாயகியெனம்மையே. 1

திருச்சிற்றம்பலம்.

---

## பெரியநாயகி விருத்தம்.

காற்றைப்பிடித்துமட்கரகத்தடைத்தபடி
　கனமப்புனற்குளுறாங்
கடைகெட்டநவவாயில்பெற்றபசுமட்கலக்
　காயத்துளேயிருத்திச்

சோற்றைச்சுமத்திரீபந்தித்துவைக்கத்
துருத்திக்குண்மதுவென்னவே
துள்ளித்துடித்தென்னபேருபெற்றேனருட்
டோயரீபாய்ச்சல்செய்து
நாற்றைப்பதித்ததென்ஞானமாம்பயிரதனை
நாட்டிப்புலப்பட்டியு
நமனைதீப்பூடுமனுகாமன்முன்னின்று
நாடுசிவபோகமான
பேற்றைப்பகுத்தருளியென்னையாளவல்லையோ
பெரியவகிலாண்டகோடி
பெற்றநாயகிபெரிய கயிலைமாநகர்மருவு
பெரியநாயகியம்மையே. 1

திருச்சிற்றம்பலம்.

---

## தந்தைதாய்.

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மெளனியரு ளழைத்தபோதே
யிந்திரசா லங்கனவு கான னீரா
யிருந்ததுவே யிவ்வியற்கை யென்னேயென்னே. 1

என்னைநான் கொடுக்கவொருப் பட்டகால
மியாதிருந்தென் னெதுபோயென் னென்னைநீங்கா
வன்னைபோ லருள்பொழியுங் கருணைவாரி
யானந்தப் பெருமுகிலே யரசே சொல்வாய். 2

அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை
யறியாத சிறியேனு னதனுண் முத்திக்
கரைசேரும படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக கருத்துட்கண்டேன். 3

கண்டேனிங் கென்னையுமென் றன்னையுநீங்காக்
கருணையுநின் றன்னையுநான கண்டேன கண்டேன்
விண்டேனென் றெனைப்புறம்பாத்தள்ளவேண்டாம்
விண்டதுநின னருட்களிப்பின் வியப்பாலன்றோ. 4

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்பினென வுவட்டாவின்பத்
தேவென்ற நீகலந்து கலந்துமுத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவிலாசம். 5

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறாவண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரளையெல்லா
மகத்துவமாப் பிரமாண்டமாகச் செய்யும்
வல்லவா நீநினைந்த வாறேயெல்லாம். 6

சொல்லாமலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சங் கல்லான்முக்கட்
கனியேநெக குருகிடவுங் காண்பேன் கொல்லோ. 7

திருச்சிற்றம்பலம்.

---

## பெற்றவட்கே.

பெற்றவட்கேதெரியுமந்தவ்ருத்தம்பிள்ளை
பெறுப்பேதையறிவாளோபேரானந்த
முறறவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு
முறுதவரேகன்னெஞ்சமுடையராவார். 1

ஆவாவென்றழுதுதொழுங்கையராகி
யப்பனேயானந்தவடிகளேநீ
வாவாவென்றவர்க்கருளுங்கருணையெந்தாய்
வன்னெஞ்சர்க்கிரங்குவதெவ்வாறுநீயே. 2

நீயேயிங்கெளியேற்குந்தாகமோக
நினைவூடேநின்றுணர்த்திநிகழ்த்தலாலே
பேயேற்குந்தனகெனவோரனபுமுண்டோ
பெம்மானேயின்னமன்புபெருகப்பாராய். 3

பாராயோவென்றுயரமெல்லாமையா
பகருமுன்னேதெரியாதோபாவியேன்முன்
வாராயோவின்னமொருகாலாறுலு
மலர்க்காலென்சென்னிமிசைவைத்திடாயோ. 4

வைத்திடுங்காலைப்பிடித்துக்கண்ணின்மார்பில் [டிச்
வைத்தணைத்துக்கொண்டுகையர்லவளைத்துக்கட்
சித்தமிசைப்புகவிருத்திப்பிடித்துக்கொண்டு
தியககமறவின்பங்கஞ்சேர்வதெனறோ. 5

சேராமற்சிற்றினத்தைப்பிரித்தெந்நாளுந்
திருவடிப்பேரினத்துடனேசேராவண்ணா
மாராகநாளலைந்தேனரசேநீதா
னறிந்திருந்துமாயையிலேனழுந்தவைத்தாய். 6

வைத்தபொருளுடலாவிமூன்றுநின்கை
வசமெனவேயான்கொடுக்கவாங்கிக்கொண்டு
சித்தமிசைப்புகுந்ததுதான்மெய்யோபொய்யோ
சிறியேற்கிங்குளவுரையாய்திகையாவண்ணம். 7

திகையாதோவெந்நாளும்பேரானந்தத்
தெள்ளமுதமுதவாமற்றிவலைகாட்டி
வகையாகவலக்கழித்தாயுண்டுடுத்து
வாழ்ந்தேனுனிரண்டுகானமாடுபோலே. 8

மாடுமக்கள்சிற்றிடையார்செம்பொனுடை
வைத்தகனதனமேடைமாடகூடம்
வீடுமென்பாற்றொடர்ச்சியோவிடைவிடாமன்
மிக்ககதிவீடன்றோவிளங்கல்வேண்டும். 9

விளங்கவெனக்குள்ளேவிளங்காநின்ற
வேதகமேபோதகமேவிமலவாழ்வே
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக்
கண்ணுதலேநாதாந்தகாட்சிப்பேறே. 10

நாதமேநாதாந்தவெளியேசுத்த
ஞாதுருவேஞானமேஞேயமேநல்

வேதமேவேதமுடிவானமோன
வித்தையிங்கென்னையினிவிட்டிடாதே. 11

திருச்சிற்றம்பலம்.

---

## கல்லாலின்.

கல்லாலினீழறனிலொருநால்வர்கருங்
கடவுணீயுணர்த்துவதுங்கைக்காட்டென்றாற்
சொல்லாலேசொலப்படுமோசொலலுந்தன்மை
துரும்புபற்றிகடல்கடக்குந்துணிபேயன்றோ. 1

அன்றேவாமோவெனவுஞ்சமயகோடி
யத்தனையும்வெவவேறாயாற்றநேரே
நின்றேயேநினைப்பெருமாறெவ்வாறுங்கே, னின்ன
ருள்கொண்டறிவதலலாநெறிவேருண்டோ. 2

நெறியார்க்கினின்னையன்றியகிலம்வேறோ
நிலநீர்தீக்கால்வானுநீயலாத
குறியாதுமில்லையென்றலையாங்கள்வேறோ
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய்.

றாயவைம்பூதச்சுமைமையைத்தாங்கி
குணமிலாமனமெனும்பேய்க்குரங்கின்பினனே
ாறுதகவலையுடன்சுழலவென்னை
வைத்தனையேபரமேனின்மகிமைநன்றே. 4

நன்றெனவுந்தீதெனவுமெனக்கிங்குண்டே
நானுகிநீயிருந்தனியாயஞ்சற்றே

யின்றெனக்குவெளியானாலெல்லாம்வல்ல
லிறைவாநின்னடியருடனிருந்துவாழ்வேன். 5

வாழ்வெனவுந்தாழ்வெனவுமிரண்டாப்பேசும்
வையகத்தார்கற்பனையாமயக்கமான
பாழ்வலையைக்கிழித்துதறிச்செயல்போய்வாழப்
பரமேநின்னானந்தப்பார்வையெங்கே. 6

எங்கேயெங்கேயருளென்றெமையிரந்தா
னேழையிவனெனவுமெண்ணியிச்சைகூரு
மங்கேயெங்கேயெளிவந்தென்னையாண்ட
வாரமுதேயுனைக்காண்பானலந்துபோனேன். 7

போனநாட்கிரங்குவதேதொழிலாவிங்ஙன்
பொருந்துநாளத்தனையும்போக்கினேனென்
ஞானநாயகனேநின்மோனஞான
நாட்டமுற்றுவாழ்ந்திருக்குநாளெந்நாளோ. 8

நாட்பட்டகமலமென்னவிதயமேவு
நறுந்தேனேதுன்மார்க்கநாரிமார்கண்
பட்ட காயமிந்தக்காயமென்றோ
கூற்றாமுயிர்பிடிக்கவருமந்நீதி. 9

வன்கேமறையெங்கேமண்விண்ணெங்கே
றுமவர்களெங்கேநெறிதப்பாத
ங்கேயொழுக்கமெங்கேயாங்களெங்கே
பின்னுமொன்றைச்சமைப்பதானால். 10

ஆளுனும்யானெனத் திங்கற்றவெல்லை
யதுபோது மதுகதி தானலலவென்று
போளுனும்யான போவனல்லான்மோனப்
புண்ணியனேவேறுமொருபொருளோநாடேன். 11

பொருளேநின் பூரணமேலிட்டகாலம்
போக்குவரவுண்டோ தற்போதமுண்டோ
இருடனுவல்லவெளி தானுண்டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோயாமங்குண்டோ.

உண்டோநீபடைத்தவுயிர்த் திரளிலென்போ
லொருபாவிதேகாதியுலகம்பொய்யாக்
கண்டேயுமெள்ளளவுத் துறவுமின்றிக
காசினிக்குள்லைந்தவரார்காட்டாய்தேவே. 13

தேவரெல்லாந்தொழச்சிவந்தசெந்தாண்முக்கட்
செங்கரும்பேமொழிக்குமொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கே
மூட்டனேன்புலம்பியசொன்முற்றுமோதான். 14

முற்றுமோவெனக்கினியானந்தவாழ்வு
மூதறிவுகக்கினியாய்நின்மூளரித்தாளிற்
பற்றுமோசற்றுமில்லையையோவையோ
பாவிபடுங்கட்கலக்கம்பார்த்திலாயோ. 15

பார்த்தனவெல்லாமழியுமதனுற்சுட்டிப்
பாராதேபார்த்திருக்கப்பரமேமோன
மூர்த்திவடிவாயுணர்த்துங்கைக்காட்டுண்மை
முற்றியெனதல்லல்வினைமுடிவதென்றே. 16

என்றுளோநீயன்றுளம்யாமென்பதென்னை
விதுநிற்கவெல்லாந்தாமில்லையென்றே
பொன்றிடச்செய்வல்லவனீயுமைபபடைக்கும்
பொற்புடையாயென்னினதுபொருந்திடாதோ. 17

பொருந்துசகமனைத்தினையும்பொய்பொய்யென்று
புகன்றபடிமெய்யென்றேபோதரூபத்
திருந்தபடியென்றிருப்பதன்றேயன்றோ
வெம்பெருமான்யான்கவலையெய்தாக்காலம். 18

காலமேகாலமொருமூன்றுங்காட்டுங்
காரணமேகாரணகாரியங்களில்லாக்
கோலமேயெனைவாவா வெனறுகூவிக், குறைவற
நின்னருள்கொடுத்தாற்குறைவோசொல்லாய். 19

சொல்லாயதொகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரேதொண்டனேனைக்
கல்லாகப்படைத்தாலுமெத்தநன்றே
கரணமுடனுறவுகலக்கமாட்டேன். 20

கலங்காதநெஞ்சுடையஞானதீரர்
கடவுளுனைக்காணவேகாயமாதி
புலங்காணார்காணுவன்ஞானம்பேசிப்
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய். 21

கண்டிலையோயான்படும்பாடெல்லாமூன்று
கண்ணிருந்துந்தெரியாதோகசிந்துள்ளன்பார்

தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச்
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. 22

சோதியா யிருட்பிழம்பைச் சூறையாடுந், தூவெ ளியே யெனைத் தொடர்ந்து தொடாந் தெந்நாளும், வாதியா நினறவினைப் பகையைவென்ற, வாழ்வேயிவ குணைப்பிரிந்து மயங்குகின்றேன். 23

மயக்குறுமென் மனமணுகாப் பாதைகாட்டி, வல வினையைப் பறித்தனையே வாழ்வே நானென், செயக் கடவேன் செயலெல்லா நினதேயென்று, செங்கைகு விப் பேனல்லாற்செயல்வேறில்லை. 24

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின், விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லான், மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன, வாரிதியின தித்திரள்போல் வயங்கிற்றம்மா. 25

அம்மாவீ ததிசயந்தா னன்றோவன்றோ, வகண்ட நிலை யாக்கியென்னை யறிவாம்வண்ணஞ், சும்மாவேயி ருக்கவைத்தா யையா வாங்கே, சுகமயமா யிருப்பதல் லாற் சொல்வானென்னே. 26

என்னேநான் பிறந்துழலவந்தவாறிங், கென்னெ னவோர்செயலில்லையே யேழை யென்பான், முன்னே

செய் வினையெனவும் பின்னேவந்து, மூளும்வினை
யெனவுமவர முறையேயெனந்தாய். 27

தாயான தண்ணருளைநிரம்பவைத்துத்
தமியேனைப்புரவாமற்றள்ளித்தள்ளிப்
போயானதென்கொலையாவேகதேசம்
பூரணத்துக்குண்டோதான்புகலல்வேண்டும். 28

புகலரிய நின்விளையாட் டெனவே யெநதாய், புன
மையறி வுடைய வெனைப் பொருளாப்பண்ணி, யிக
ல்விளைக்கு மலமாயை கனமத்தாடே, யிடருறவுஞ்
செய்தனையே யிரக்க மீதோ. 29

இரக்கமொடுபொறையீதலறிவாசார
மில்லேனைல்லோாகளீட்டங்கண்டாற
கரக்குமியல்புடையேன்பாழ்நெஞ்சமெந்தாய்
கருந்தாதோவல்லுநக்கோகரியகல்லோ. 30

திருச்சிற்றம்பலம்.

---

## பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத் திருவருளாம்பூமிமுதற்
பாராதியாண்ட பதியேபராபரமே. 1

கண்ணாரக்கண்டோர் கருப்பொருள்காணமலருள்
விண்ணூடிருந்தவின்ப வெற்பேபராபரமே. 2

சிந்தித்தவெல்லாமென் சிந்தையறிந்தேயுதவ
வந்தகருணை மழையேபராபரமே. 3

ஆராவமுதேயரசேயா னந்தவெள்ளப்
பேராரே[illegible]னப் பெருக்கேபராபரமே. 4

ஆரறிவாரென்ன வனந்தமறையோலமிடும்
பேரறிவேயின்பப் பெருக்கேபராபரமே. 5

உரையிறந்தவன்பருளத் தோங்கொளியாயோங்கிக்
கரையிறந்தவின்பக் கடலேபராபரமே. 6

எத்திக்குந்தானாகி யென்னிதயத்தேயூறித்
தித்திக்குமானந்தத் தேனேபராபரமே. 7

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர்நெல்லிக் கனியேபராபரமே. 8

முத்தேபவளமே மொய்த்தபசும்பொற்சுடரே
சித்தேயென்னுள்ளத் தெளிவேபராபரமே. 9

கண்ணேகருத்தேயென் கற்பகமேகண்ணிறைந்த
விண்ணேயானந்த வியப்பேபராபரமே. 10

வாக்காய்மனதாய் மனவாக்கிறந்தவாபாற்
றாக்காதேதாக்குந் தனியேபராபரமே. 11

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்ற
வொரு, வார்த்தைசொல்லவந்த மனுவேபராபரமே.

வானந்தமண்ணினந்தம் வைத்துவைத்துப்பாக
கவெனக், கானந்தந்தந்த வரசேபராபரமே. 13

அன்பைப்பெருககியென தாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கே யிறையேபராபரமே. 14

வானமெல்லாங்கொண்ட மௌனமணிப்பெட்ட
கத்துக், கானபணியான வணியேபராபரமே. 15

ஓடுமிருவிதியு மொன்றாகக்கண்டவர்க
ளூடும்பொருளான நட்பேபராபரமே. 16

சித்தநினைவுஞ் செய்யுஞ்செயலுநீயெனவா
மூததமர்கட்கான வுரவேபராபரமே. 17

போதாந்தபுண்ணியர்கள் போற்றிசயபோற்றியெ
னும், வேதாந்தவீட்டில் விளக்கேபராயரமே. 18

முத்தாந்தவீதி முளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந் தேவேபராபரமே. 19

ஈனந்தருமுடல மென்னதியானென்பதற
வானந்தவேண்டி யலந்தேன்பராபரமே 20

கூர்த்தவறிவத்தனையுங் கொள்ளைகொடுத்துன்னரு
ளைப், பார்த்தவனென்னைமுகம் பாராய்பராபரமே.

கடலமுதேதேனேயென் கண்ணேகவலைப்
படமுடியாதென்னைமுகம் பார்நீபராபரமே. 32

உள்ளமறிவா யுழப்பறிவாய்நானேழை
தள்ளிவிடின்மெத்தத் தவிப்பேன்பராபரமே. 33

கன்றினுக்குச்சேதா கனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்பராபரமே. 34

எண்ணாதவெண்ணமெலா மெண்ணியெண்ணி
யேழைநெஞ்சம், புண்ணாகச்செய்ததினிப் போதும்பரா
பரமே. 35

ஆழ்ந்ததுரும்பெனவே யங்குமிங்குமுன்னடிமை
பாழிற்றிரிவதென்ன பாவம்பராபரமே. 36

கற்றவறிவாலுனைநான் கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமென்றென்னெஞ்சே கொதிக்கும்பராபரமே.

ஐயோவுனைக்காண்பா னாசைகொண்டதத்தனையும்
பொய்யோவெளியாப் புகலாய்பராபரமே. 38

துன்பக்கண்ணீரிற் றுளைந்தோர்க்குன்னானந்த
வின்பக்கண்ணீர்வருவ தெந்நாள்பராபரமே. 39

வஞ்சனையும்பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுள
றா, நெஞ்சனுக்குமுண்டோ நெறிதான்பராபரமே.

பாசம்போய்நின்றவர்போர் பாராட்டி யானுனு
மோசம்போனேனுன் முறையோபராபரமே. 41

நன்றறியேன்தீதறியே னானெனறுநின்றவனு
ரென்றறியேனேனைழ யென்னைபராபரமே. 42

இன்றுபுதிதன்றே யெளியேன்படுந்துயரு
மொன்றுமறியாயோ வுரையாய்பராபரமே. 43

எத்தனைதான்சன்மமெடுத தெத்தனைநான்பட்டது
ய, ரத்தனையுநீயறிந்த தன்றோபராபரமே. 44

இந்தநாட்சற்று மிரங்கிலையேற்காலனவரு
மந்தநாட்காக்கவல்லா ரார்காண்பராபரமே 45

உற்றுற்றுநாடி யுளமருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே. 46

எள்ளளவுநினைவிட வில்லாவெனைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன் சாற்றாய்பராபரமே. 47

பாடிப்படித்துலகிற் பாராட்டிநிற்பதற்கோ
தேடியெனையடிமை சேர்த்தாய்பராபரமே. 48

வெட்டவெளிப்பேதையன்யான் வேறுகபடொன் றறியேன், சிட்டருடன்சேரனந்தந் தெண்டன்பராபரமே. 66

இரவுபகலற்றவிடத் தேகாந்தயோகம்
வரவுந்திருக்கருணை வையாய்பராபரமே. 67

மால்காட்டிச்சிந்தை மயங்காமனின்றுசுகக்
கால்காட்டிவாங்காதே கண்டாய்பராபரமே. 68

எப்பொருளுநீயெனவே யெண்ணிநான்றன்னுத
வைப்பையழியாநிலையா வையாய்பராபரமே. 69

சும்மாவிருப்பதுவே சுட்டற்றபூரணமென்
றெம்மாலறிதற் கெளிதோபராபரமே. 70

முன்னொடுபின்பக்க முடியடிநாப்பண்ணறநின்
றன்னொடுநாநிற்பதென்றோ சாற்றாய்பராபரமே. 71

மைவண்ணந்தீர்ந்த மௌனிசொன்னதெவ்வண்ண
மவ்வண்ணநிட்டை யருளாய்பராபரமே. 72

வித்தன்றியாதும விளைவதுண்டோநின்னருளாஞ்
சித்தன்றியாங்களுண்டோ செப்பாய்பராபரமே. 73

ஆங்காரமற்றான் னறிவானவன்பருக்கே
தூங்காததூக்கமது தூக்கும்பராபரமே. 74

சிந்தையவிழ்ந்தவிழ்ந்து சின்மயமாநின்னடிக்கே
வந்தவர்கேயின்பநிலை வாய்க்கும்பராபரமே. 75

சொல்லாடாவூமறைப்போற் சொலவிறந்துநீயாகி
னல்லாலெனக்குமுத்தி யாமோபராபரமே. 76

பேச்சாகாமோனம் பிறவாமுளைத்ததென்றற்
காச்சாச்சுமேற்பயனுண் டாமோபராபரமே. 77

கெட்டியென்றான் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர்பூரணமாந், தொட்டிலுக்குட் சேய்போறறயின்றார் பராபரமே. 78

காட்டவருளிருக்கக் காணாதிருண்மலத்து
நாட்டமெனக்குவா னன்றோபராபரமே. 79

எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநினனருளு மன்றோபராபரமே 80

எத்தனையோதேர்ந்தாலு மென்னாலே யின்பமுண்டோ, சித்துருவேயினபச் சிவமேபராபரமே. 81

மண்ணெண்ணும்விண்காட்டி மறைந்துமறையாவருளைக்
கண்ணெண்டுகண்ணைகவென்று காண்பேன்பராபரமே.

பஞ்சரித்துநின்னைப் பலகாலிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டே யன்றோபராபரமே 83

எங்கெங்கேபார்த்தாலு மெவ்வுயிர்க்குமவ்வுயிரா
யங்கங்கிருப்பதுநீ யன்றோபராபரமே. 84

அனைத்துமாய்நின்றாயே யான்வேறோநின்னை
நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்பராபரமே. 85

நின்போதத்தாலே நினைப்புமறப்புமென்று
லென்போதமெங்கே யியம்பாய்பராபரமே. 86

ஒன்றைநினைந்தொன்றைமறந் தோடுமனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கே யியங்கும்பராபரமே. 87

கொழுந்திலவயிரமெனக் கோதறவுள்ளன்பி
ல்முழுந்துமவர்க்கேசுகமுண் டாகும்பராபரமே. 88

பற்றும்பயிர்க்குப் படர்கொழுந்துபோற்பருவம்
பெற்றவர்க்கேநின்னருடான் பேறும்பராபரமே. 89

யோகியர்க்கேஞான மொழுங்காம்பேரன்பாக
தாகியரும்யோகமுன்னே சார்ந்தோர்பராபரமே. 90

அல்லும்பகலு மறிவாகிநின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ் சுமைகாண்பராபரமே. 91

எச்சிலென்றுபூவையிகழ்ந்தோர்க்குனைப்போற்றப்
பச்சிலையுங்கிள்ளப் படுமோபராபரமே. 92

அந்தக்கரண மடங்கத்துறப்பதுவே
யெந்தத்துறவினுநன் றெந்தாய்பராபரமே. 93

தன்னையறிந்தா றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோ பேசாய்பராபரமே. 94

அன்பாற்கரைந்துகண்ணீ ராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வரவழிதா னுண்டோபராபரமே.

தன்னையறிதருளே தாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற் குபாயம்பராபரமே. 66

கற்றகலையானிலைதான் காணுமோகாண்பதெல்லா
மற்றவிடத்தேவெளியா மன்றோபராபரமே. 97

கண்மூடிக்கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னரு
ளாம், விண்மூடினெல்லாம் வெளியாம்பராபரமே. 98

நேரேநினதருளென் னெஞ்சைக்கவரினென்றும்
பாரேன்சுகமும் படைப்பேன்பராபரமே. 99

வான்காணவேண்டின் மலையேறலொக்குமுன்னை
நான்காணப்பாவனைசெய் நாட்டம்பராபரமே. 100

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால்வேறு
மொரு, சாதனை தானுண்டோநீ சாற்றாய்பராபரமே.

பாரகமும்விண்ணகமும் பற்றாகநிற்பதருட்
டாரகத்தைப்பற்றியன்றோ சாற்றாய்பராபரமே. 102

விளக்குந்தகளியையும் வேறென்றார்நின்னைத்
துளககமறச்சீவனென்று சொலவார்பராபரமே. 103

பாராதிநீயாப் பகர்ந்தாலகமெனவு
மாராயுஞ்சீவனுநீ யாங்காண்பராபரமே. 104

பொய்யைப்பொய்யென் றறியும்போதத்துக்காதர
வுன், மெய்யருளேயன்றோ விளம்பாய்பராபரமே.105

வருவான்வந்தேனெனல்போன் மன்னியமுயிருஞ்ச
கத்தை, தெரிவாகவில்லையென்ற தீரமபராபரமே.

மாயாசகமில்லையென மற்றெனக்கோர்பற்றுமில்லை
நீயேநானென்றுவந்து னிற்பேன்பராபரமே. 107

வானாதிநீயெனவே வைத்தமறையென்னையுநீ
தானாகச்சொல்லாதோ சாற்றாய்பராபரமே. 108

வெள்ளககருணைமத வேழமாநின்னருட்கென்
கள்ளக்கருத்தே கவளம்பராபரமே. 109

வேண்டாய்த்துவண்டு மௌனமலரணைமேற்
கொண்டார்க்கோவின்பங் கொடுப்பாய்பராபரமே.

மாயைமுதலாம்வினைநீ மன்னுயிர்நீமன்னுயிர்சேர்ந்
தாயுமறிவானதுநீ யன்றோபராபரமே 111

என்னறிவும்யானுமென தென்பதுவுமாமிவைக
ளின்னவையேயன்றோ னிகழ்த்தாய்பராபரமே. 112

பாரறியாதண்டப பரப்பறியாதுன்பெருமை
யாரறிவாரநாறோ வறியேன்பராபரமே 113

அண்டமனைத்திலுமா யப்பாலுக்கப்பாலுங்
கொண்டனின்னையாரறிந்து கொள்வார்பராபரமே

ஒப்புயர்வொன்றின்றி யொலிபுகாமோனவட்டக்
கப்பலுக்காம்வான்பொருணீ கண்டாய்பராபரமே

என்போலெளியவரு மெங்கெஙகும்பார்த்தாலு
முன்போலவலியவரு முண்டோபராபரமே. 116

பார்க்கினண்டபிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ்செயலிலையே யையாபராபரமே. 117

ஒன்றேபலவே யுருவேயருவேயோ
வென்றேயழைப்பதுன்னை யென்றோபராபரமே. 118

செப்புவதெல்லாஞ்செபநான் சிந்திப்பதெல்லானின்
ஜெப்பிறியானமெனு வோர்ந்தேன்பராபரமே. 119

ஆரிருந்தென்னார்போ யென்னாரமுதாநின்னருளின்
சீரிருநதாலும் பேவன் சிவமேபராபரமே. 120

வஞ்சநமன்வாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந்தே னையாபராபரமே. 121

எந்தப்படியுன் னிதயமிருந்ததெமக்
கந்தப்படிவருவ தன்றோபராபரமே 122

எந்தெந்தநாளு மெனைப்பிரியாதென்னுயிராய்ச்
சிந்தைகுடிகொண்டவருட் டேவேபராபரமே. 123

அஞ்சலஞ்சலெனறடிமைக் கப்போதைக்கப்போதே
நெஞ்சினுணர்த்து னிறைவேபராபரமே. 124

என்னையுனறன் கைக்களித்தார் யாவரென்னையா
னகொடுத்துப், பின்னையுன்றற் பெற்றநலம் பேசேன்
பராபரமே. 125

வாய்பேசாவூமையென வைககவென்றோநீமௌனத்
தாயாகவந்தருளைத் தந்தாய்பராபரமே. 126

தன்னைத்தந்தென்னைத் தடுத்தாண்டனின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபல னெந்தாய்பராபரமே.

மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க்கென்ன பயங்காண்பராபரமே.

சுட்டியுணராமற் றுரியநிலையாய்வெளியில்
விட்டநின்னையாரோ வியப்பேன்பராபரமே 129

ஆதொன்றுமின்றியென்னைச் சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும்போதாதோ வின்பம்பராபரமே. 130

வாயொன்றும்பேசா மௌனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோ வின்பம்பராபரமே. 131

என்றுமிருந்தபடிக் கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோ வுரையாய்பராபரமே. 132

எண்டிசைகீழ்மேலான வெல்லாம்பெருவெளியாக்
கண்டவிடத்தென்னையுநான் கண்டேன்பராபரமே

பித்தனையேதுமறியாப் பேதையனையாளவுனக்
கெத்தனைதான்றெண்டமிடுவேன்பராபரமே.

தாயர்கர்ப்பத்தூடனமுந் தண்ணீருந்தந்தருளு
நேயவுனையாரே நினைவார்பராபரமே. 135

விரிந்தமனமொடுங்கும் வேளையிறைகைப்
பரந்தவருள்வாழி பதியேபராபரமே. 136

சிந்தையைப்போய் நானெனனல்போய்த் தேக்கவின்பம்
மாமழைபெய், வந்துபொழிந்தனைநீவாழிபராபரமே.

தந்தேனேபோர்வசனந் தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேனேயென்றனைநீ வாழிபராபரமே. 138

மண்ணும்விண்ணுமவந்து வணங்காவோ. நின்னருளாக, கண்ணுறவுட்கண்டவரைக் கண்டாற் பராபரமே. 139

என்றுங்கருணைபெற்ற வினபத்தபோதனர்சொற்
சென்றசென்றதிக்கனைத்துஞ் செல்லும்பராபரமே.

ஆடுவதும்பாடுவது மானந்தமாகநினைத்
தேடுவதுநின்னடியார் செய்கைபராபரமே. 141

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாய்ப் பெற்றவர்கட், கெங்கெழுந் தென்னாயி றியம்பாய் பராபரமே. 142

பாலரொடுபேயர்பித்தர் பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே. 143

உண்டுடுத்துப்பூண்டிங் குலகத்தார்போற்றிரியுந்
தொண்டர்விளையாட்டே சுகங்காண்பராபரமே.

இருள்பகலற்றதிருக் காட்சியர்கண்கண்டவழி
யெங்குமொருவழியே யெந்தாய்பராபரமே. 145

காயநிலையல்லவென்று காண்பாருறங்குவரோ
தூயவருட்பறமுத் தொடாவார்பராபரமே. 146

அப்புமுப்பும்போனற வயிக்யபரானந்தர்தமக்
கொப்புவமைசொல்லவும்வா யுண்டோபராபரமே.

சித்தந்தெளிந்து சிவமானேரெல்லோர்க்குந்
கொத்தடிமையான குடிநான்பராபரமே. 148

தம்முயிர்போ. லெவ்வுயிருந்தானென்று தண்ணரு
ருள்கூர், செம்மையருக் கேவலென்று செய்வேன்
பராபரமே. 149

விண்ணுக்கும்விண்ணுகி மேவுமுனக்கியான்பூசை
பண்ணினிற்குமாறு பகராய்பராபரமே. 150

நெஞ்சகமேகோயி னினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ள வாராய்பராபரமே 151

கெட்டவழியாணவப்பேய் கீழாகமேலான
சிட்டருனைப்பூசை செய்வார்பராபரமே. 152

கால்பிடித்துமூலக் கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம் விழுமோபராபரமே. 153

பஞ்சசுத்திசெய்துநின்னைப் பாவித்துப்பூசைசெய்
தால், விஞ்சியஞானம் விளங்கும்பராபரமே. 154

அன்பர்பணிசெய்யவென்னை யாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந் தெய்தும்பராபரமே. 155

மூர்த்திதலந்தீர்த்த முறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும்வாய்க்கும்பராபரமே.

விரும்புஞ்சரியைமுதல் மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோ லன்றோபராபரமே. 157

தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணுக நல்லோர்பராபரமே 158

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்றவாணவப்
பேய்க, கின்னலவருவதெந்நாளெந்தாய்பராபரமே.

இன்றோவிருவினைவந் தேறியதுநானென்றோ
வன்றேவிளைந்ததன்றோ வாற்றேன்பராபரமே. 160

எண்ணமுந்தானின்னைவிட வில்லையென்றால்யான்
முன்னமே, பண்ணவினையேது பகராய்பராபரமே. 161

என்னையின்னதென்றறியா வேழைக்குமழகெடுவேன்
முன்னைவினைக்கூடன் முறையோபராபரமே. 162

அறியாநான்செய்வினையை யையாநீகூட்டுங்
குறியேயெனக்குளவு கூறாய்பராபரமே. 163

என்னைக்கெடுக்க விசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே. 164

வல்லமையேகாட்டுகின்ற மாமாயைநானொருவ
னில்லையெனினெங்கே யிருக்குமபராபரமே. 165

முக்குணத்தாலெல்லா மூளக்கப்பிரகிருதிக்
கிக்குணத்தைநல்கியதா ரெந்தாய்பராபரமே. 166

ஆற்றப்படாதுதுன்ப மையுவென்றலென்மனது
தேற்றப்படாதினியென் செய்வேனபராபரமே. 167

பூராயமாய்மனதைப் போககவறியாமலேயோ
பாராயலைந்தே னரசேபராபரமே. 168

சினமிறககககற்றாலுஞ் சித்தியெல்லாமபெற்றாலு
மனமிறக்கக்கல்லாக்கு வாயேனபராபரமே 166

மாதுக்குவந்தெதிர்த்த மலலரைப்போற் பாழ்த்தம
ன, மேதுக்குக்கூத்தாடு தெந்தாய்பராபரமே. 170

சூதாடுவார்போற் றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே. 171

காலமொருமூன்றுங் கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார் நல்லோர்பராபரமே. 191

கொல்லாவிரதமொன்று கொண்டவரேநல்லோர்மற்
றல்லாதார்யாரோ வறியேன்பராபரமே 192

இல்லாதகாரியத்தை யிச்சித்துசிந்தைவழி
செல்லாமைநல்லோர் திறங்காண்பராபரமே. 193

ஏதுவந்துமேதொழிந்துமென்னதியானென்னார்கள்
போதநிலைகண்ட புலத்தோர்பராபரமே 194

ஆயிரஞ்சொன்னாலு மறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற பிழைகாண்பராபரமே 195

மாயமயக்கொழிந்தாற் மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையி னிற்பாராபராபரமே. 196

நித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்ல துறவோர்பராபரமே. 197

என்னெஞ்சமேனு மிரங்குமேநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோ காட்டாய்பராபரமே. 198

மந்தவறிவாகியின்பம் வாயாதிருந்தலைந்தாற்
சிந்தைமயங்காதோவென் செய்வேன்பராபரமே. 199

தேடினேன் றிக்கனைத்துந் தெண்டனிட்டேன் சி
ந்தைநைந்து, வாடினே னென்மயக்க மாற்றாய் பரா
பரமே. 200

மடிமையெனுமொன்றை மறுத்தன்றோவென்னை
யடிமைகொளலவேண்டு மரசேபராபரமே. 201

காலாபயந்தீரவின்பக் காற்கபயமென்றெழுந்த
மாலைவளர்த்தனையே வாழிபராபரமே. 202

நீர்ப்புற்புதமாய் நினைவருட்கேநின்றழியப் [மே.
பார்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன்பராபர

நீர்க்குமிழிபோலென்னினைவுவெளியாய்க்கரையைப்
பார்க்குமிடமெல்லா மென்பார்வைபராபரமே. 204

ஆடியோய்பம்பரம்போ லாசையுடனெங்குமுனைத்
தேடியோய்கின்றேனென் செய்வேன்பராபரமே.

வேதாந்தஞ்சித்தாந்தம் வேறென்னார்கண்களிக்கு
நாதாந்தமோன நலமேபராபரமே. 206

ஆனந்தமானநின்னை யன்றியொன்றையுன்னாத
மோனந்தமியேற்கு முத்திபராபரமே. 207

ஏதுக்குமுன்னைவிடவில்லையென்றுலென்கருத்தைச்
சோதிக்கவேண்டாநான சொன்னேன்பராபரமே.

முத்தியிலுநதேகமிரை மூவிதமாஞ்சித்திபெற்றோ
ரெத்தனைபேரெனறுரைப்ப தெந்தாயபராபரமே.

நீயனறிநானுர் நினைவாரென்னெஞ்சகமார்
தாயன்றிச்சூலுமுண்டோ சாற்றாய்பராபரமே. 210

அங்கமோநின்வடிவ மானசுகாகூபமோநீ
யெங்குமேனெனெனற தென்னைபராபரமே. 211

கொள்ளைவெள்ளத தண்ணருண்மேற் கொண்டு சுழித்தார்த்திழுத்தாற், கள்ளமனக கப்பலெங்கே காணும பராபரமே. 212

எக்கலையுங்கற்றுணார்ந்தோ னென்றவர்க்குஞ் சம்ம தஞ்சொல, வெககணையாலின்பம்வருமோபராபரமே.

கல்லெறியப்பாசி கலைந்துநன்னீர்காணுநல்லோர்
சொலலுணரின்ஞானம்வந்து தோன்றும்பராபரமே

நின்னையுணர்ந்தோர்கடமை நிந்தித்தபேயறிஞ
ரெனனகதிபெறுவா ரெந்தாய்பராபரமே. 215

மன்னதியானென்னலற்றோ ரெங்கிருந்துபார்க்கினு
மன்னிதியாநீபெரிய சாமிபராபரமே. [நின்

சோற்றுததுருத்திச் சுமைசுமப்பக்கண்பிதுங்கக்
காற்றைப்பிடிக்கலைநானே கண்டாய்பராபரமே. 217

உள்ளபடியொன்றையுரைக்கினவர்களுள்ளுறவாய்க
கள்ளமின்றியன்பாய்க் களிப்பேன்பராபரமே. 218

அறித்தவிபல பாகவொனறை யான்பகர்வதல்
லாற், றெறிநதறொன்றையானவேண்டிச் சொல்லேன
பராபரமே. 219

உள்ளமறியாதொருவ ரொனறையுன்னிப்பேசிலே
யோ, துள்ளியிளங்கன்றாய்த் துடிப்பேன்பராபரமே.

எல்லாருமின்புற் றிருக்கநினைப்பதுவே
யலலாமல்வேறொன் றறியேன்பராபரமே. 221

முன்னுண்மெய்ஞ்ஞான முனிவர்தவமீட்டுதல்போ
லின்நாளிற்காணவெனக் கிச்சைபராபரமே. 222

தன்மமென்பதெல்லாங் கரிசறவேமெய்ஞ்ஞான
தன்மநிலைசார்ந்தஅன்பர் தன்மைபராபரமே 223

கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற்
மண்டியபே ரொளிநீ வாழிபராபரமே. 224

நானென தன்மையென்று நாடாமனுடைவின்ப
வானகிநின் றனைநீ வாழிபராபரமே. 225

அநததூட னுவனுவா யண்டமெல்லாநதானுய்
மகத்தாகிநின் றனைநீ வாழிபராபரமே. 226

காரகமாங்காப்பவறைக் கண்ணூடுமென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீவாழிபராபரமே. 227

புரந்தோர்தந்தேசமென்பார பூமியைப்போராடி
யிரந்தோருந்தம்மதெனபா ரென்னேபராபரமே. 228

மூர்த்தியெலலாம் வாழியெங்கண் மோனகுருவா
ழியருள், வார்த்தையென்றும் வாழியன்பர் வாழிபரா
பரமே 229

சொலலும்பொருளுந தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணை செய்தாய்பராபரமே. 230

இறைவரைக்குள்ளாக வெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர் பேசாய்பராபரமே. 231

நாடுநகருநிசா ளுட்டியபாளயமு
மீடுசெயுமோமுடிவி லெநதாய்பராபரமே. 232

தேடுந்திரவியமுஞ் சேர்ந்தமணிபெட்டகமுங்
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே. 233

தேடாததேட்டினரே செங்கைத்துலாக்கோல்போல்
வாடாச்சமனிலையில் வாழ்வார்பராபரமே. 234

நீராய்க்கசிந்துருகி நெட்டுயிர்த்துநின்றேனைப்
பாராததென்னனே பகராய்பராபரமே 235

உள்ளபொருளாவி யுடன்மூன்றுமன்றேதான்
கொள்ளைகொண்டநீயென் குறைதீர்பராபரமே 236

ஆழ்ந்தாயேயிவ்வுலகி லல்லலெல்லாந்தீர்ந்தருளால்
வாழ்ந்தாயேயென்றனைநீ வாழிபராபரமே. 237

தாராவருளையெல்லாந் தந்தெனையுநின்னருளில்
வாராயோவென்றனைநீ வாழிபராபரமே. 238

ஆசையுன்மீதல்லா லருளறியவேறொன்றிற்
பாசம்வையேனினகருணைப் பாங்காற்பராபரமே

ஆதியந்தநீகுருவா யாண்டதல்லானின்னையனறிப்
போதனையுமுண்டோ புகலாய்பராபரமே. 240

தானகவந்துதடுத் தாண்டெனையினப
வானகச்செய்தவின்ப வானேபராபரமே. 241

பற்றற்றிருக்குநெறி பற்றிற்கடன்மலையுஞ்
சுற்றநினைகருமனஞ் சொனனேன்பராபரமே. 242

படிப்பறறுகேள்வியற்றுப் பற்றற்றுசசிந்தைத்
துடிப்பற்றார்க்கன்றோ சுகங்காண்பராபரமே 243

சத்தாகிநின்றோர் சடங்களிலிங்கமெனை
வைத்தாருமுண்டேயென வாழ்வேபராபரமே. 244

சித்தநிருவிகற்பஞ் சேரநதாருடற்றீபம்
வைத்தகர்ப்பூரமபோல் வயங்குமபராபரமே 245

ஆதிகாலத்திலெனை யாண்டனையேயிப்பானீ
போதியெனினெஙகேநான் போவேனபராபரமே.

நாலெழுத்துஞ் சொன்மலரோ நாளுந்திகழும பொன்மலரோ, தேவையுனக் கினனதென்று செப்பாய பராபரமே. 247

கன்னறரும்பாகாய்க் கருப்புவட்டாய்க்கற்கண்டா
யின்னமுதாயெனனு ளிருந்தாய்பராபரமே. 248

சிறபரமேதற்பரமே தெய்வசசுருதிசொன்ன
வற்புதமேயன்பே யறிவேபராபரமே. 249

அறிவிப்பானீயென்று லைம்புலங்கடந்தந்
நெறிநிற்பார்யாரே நிகழ்த்தாய்பராபரமே. 250

அந்தக்கரணமெனு மாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்ட வழகோபராபரமே. 251

ஐவரொடுங்கூடாம லந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவே சிவமேபராபரமே 252

[illegible]ளாகிநின்றசுக மாகாமலையோ
விருளாகிநிற்க வியல்போபராபரமே 253

அன்பரெல்லாமின்ப மருந்திடவும்யானொருவன்
றுன்புறுதனன்றோநீ சொல்லாய்பராபரமே 254

சந்ததமுநின்கருணை சாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுன் சித்தம்பராபரமே 255

நானெனக்குளறு நாட்டத்தாலென்னைவிட்டுப்
போனாலுமுன்னைவிட்டுப் போகேன்பராபரமே 256

இக்காயம்பொய்யென்றோ ரீட்டத்துனக்கபயம்
புக்காதாருண்டோ புகலாய்பராபரமே 257

தானுதலபூரணமே சாருமிடமுண்டுயிரும்
வானுதியுமொழுங்காய் மனனும்பராபரமே. 258

உன்னுமனங்கர்ப்பூர வுண்டைபோலேகரைய
மின்னுமானந்த விளக்கேபராபரமே 259

நாட்பட்டலைந்த நடுக்கமெல்லாந்தீர வுனக்
காட்பட்டுந்துன்பமெனக் காமோபராபரமே. 260

அண்டபிண்டங்காணே னகமும்புறமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம்பராபரமே. 279

எத்தனைபோ கோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கிலையென் செய்வேன்பராபரமே. 280

அன்றந்தநாலவருக்கு மற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தையெனக் குண்டோபராபரமே.

அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றும்முனை
செப்புவதுமுன்னிலையின் சேர்க்கம்பராபரமே [யே

கட்டுங்கனமுமந்தக் காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோ விளம்பாய்பராபரமே 283

பேசாதமோனநிலை பெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தான் வாய்க்கும்பராபரமே. 284

கற்றாலுங்கேட்டாலுங் காயமறியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோ பேசாய்பராபரமே. 285

கண்டவடிவெல்லாங் கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளே யன்றோபராபரமே. 285

தன்செயலாலொன்றுமில்லை தானென்றானென்பாவி
நின்செயலாய்நில்லா நினைவேன்பராபரமே. 287

கொலைகளவுகட்காமங் கோபம்விட்டாலன்றே
மலையிலக்காநின்னருடான் வாய்க்கும்பராபரமே. 288

தன்னையறியாதுசகந் தானயிருந்துவிட்டா
லுன்னையறியவருந் துண்டோபராபரமே 289

ஒன்றிரண்டென்றன்று வுணாவுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னையாளு மிறைமேபராபரமே 290

கருதுமடியார்களுள்ளங் காணவெளியாகுந்
துரியநிறைவான சுகமேபராபரமே 291

பொய்குவித்தநெஞ்சனருட்பொற்பறிந்துதிக்கனைத்துங், கைகுவித்துநிற்பதெந்தக் காலம்பராபரமே.

அத்துவிதமான வயிக்யவனுபவமே
சுத்தநிலையந்நிலையார் சொலவாபராபரமே. 293

வைத்தசுவராலம்பின் மண்போமோமாயையினோர்க
கெத்தனைபோதித்துமென்ன மெந்தாப்பராபரமே

பூட்டற்றுத்தேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைக்
காட்டத்தகாதோவென் கண்ணேபராபரமே 295

சொல்லிப்பதர்களைந்து சொன்முடிவுகாணாதார்
நெல்லிற்பதர்போல நிற்பர்பராபரமே. 296

அழுக்காற்றானெஞ்ச மழுங்கியபுன்மாக்க
ளிழுக்காற்றலின்பல மெய்தார்பராபரமே 297

தேகாதிபொய்யெனவே தேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோ மொழியாய்பராபரமே 298

சாதனையெல்லாமவிழத் தற்போதங்காட்டாதோர்
போதனைநீங்கல்குவதெப் போதோபராபரமே 299

ஒன்றுமறியாவிருளா முள்ளம்படைத்தவெனக்
கென்றுகதிவருவ தெந்தாய்பராபரமே 300

சிந்திக்குந்தோறுமென்னுட் சிற்சுகமாயூற்றூறிப்
புந்திக்குணின்றவருட் பொற்பேபராபரமே 301

என்றுமடைந்தோர்கட் கிரங்காகுறிப்பனைத்துங்
கன்றையுதைகாலி கதைகாண்பராபரமே. 302

குற்றங்குறையக குணமேமேலிடவருளை
யுற்றவரேயாவர்க் குறவாம்பராபரமே. 303

ஒருமையால்வாய்க்குமுண்மைக் கோரனந்தநூல் கோடிப், பேருரையாற்பேசிலென்ன பே…பராபரமே. 304

சொல்லுஞ்சமயநெறிச் சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதென்றைக் கையாபராபரமே. 305

பிடித்ததையேதாபிக்கும் பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லா ரார்காண்பராபரமே. 306

நேசத்தானின்னை நினைக்குநினைவுடையார்
ஆசைக்கடலி லழுந்தாராபராபரமே. 307

கள்ளாதுகட்டுணவுங் காரியமோநானொருசொற்
கொள்ளாததோஷமன்றோ கூறாய்பராபரமே. 308

சென்றவிடமெல்லாந் திருவருளேதாரகமா
நின்றவர்க்கேயானந்த நிட்டைபராபரமே. 309

நீட்சிகுறுகலில்லா நித்யசுகாரம்பசக
ராஷியாமுன்னைவந்து சார்ந்தேன்பராபரமே. 310

வானாதிதத்துவமாய மனனிநின்றகாரணநீ
நானாகிநிற்பதெந்த நாளோபராபரமே. 311

காட்டத்திலங்கி கடையவந்தாலென்னவுன்னு
நாட்டத்திலூடுவந்த நட்பேபராபரமே. 312

நித்திரையாய்த்தானே நினைவயர்ந்தானித்தநித்தஞ்
செத்தபிழைப்பானதெங்கள் செய்கைபராபரமே.

இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்
றுமனந், துன்புறுதல் வன்பிறவித் துக்கம்பராபரமே.

பொய்யகலமெய்யான போதநிலைகண்டோர்க்கோ
ரையமிலையையமிலை யையாபராபரமே. 315

மந்திரத்தையுன்னி மயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத் தகாதோபராபரமே 316

விண்கருணை பூத்ததென்ன மேவியுயிர்கட்குயிராய்த்
தண்கருணைதோன்றவருடாய்நீபராபரமே. 317

தன்மயமாய்நின்றநிலை தானேதானாகிநின்று
னின்மயமாயெல்லா நிகழும்பராபரமே. 318

ஏங்கியிடையுநெஞ்ச வேழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுன்மேற் பாரம்பராபரமே.

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னகன்மம் புகலாய்பராபரமே. 320

எங்கணுநீயென்று லிருந்தபடியெய்தாம
லங்குமிங்குமென்றலைய லாமோபராபரமே. 321

கற்குமதுவுண்டு களித்தலல்லானின்னருளி
னிற்குமதுதந்ததுண்டோ நீதான்பராபரமே. 322

அண்டபகிரண்ட மறியாதநின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற் கதியாம்பராபரமே. 323

கலக்கமுறனெஞ்சைக் கலக்கித்திரும்பத்
துலககுபவனீயலையோ சொலலாய்பராபரமே. 324

சிந்தையுமென்போலச் செயலற்றடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலா வாழ்வேன்பராபரமே. 325

பந்தமெலாந்தீரப் பரஞ்சோதிநீகுருவாய
வந்தவாடிவை மறவேன்பராபரமே 326

தானந்தமான சகசநிருவிகற்ப
வானந்தநிட்டையருளையாபராபரமே. 327

அல்லலெல்லாந் தீரவெனக கானந்த மாகவொரு,
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன்ப
ராபரமே. 328

சிந்தைமயக்கமறச் சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுனக்கென்னையுநான் றந்தேன்பராபரமே. 329

மைமகாட்டுமாயை மயக்கமறநீகுருவாய்க
கைகாட்டவுங்கனவு கண்டேன்பராபரமே. 330

மால்வைத்தசிந்தை மயக்கரவென்சென்னிமிசைக
கால்வைக்கவுங்கனவு கண்டேன்பராபரமே 331

மணஞ்ஞனமாயையெல்லா மாண்டுவெளியாகவிரு
கண்ஞரவுங்கனவு கண்டேன்பராபரமே. 332

பன்னிர்மையாலே மயங்காதுன்கையாலென்
கண்ணீர்துடைக்கவுநான் கண்டேன்பராபரமே. 333

உள்ளதுணரா வுணர்விலிமாபாவியென்றோ
வெள்ளவெள்ளக்கைநெகிழ விட்டாய்பராபரமே.

எல்லாநின்னதுசெய லென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோ வையாபராபரமே. 335

பந்தமயக்கிருக்கப் பற்றொழிந்தேனென்றுளறு
மிந்தமயக்கமெனக்கேன்பராபரமே 336

காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ
யாதினுக்கு மாட்சியுன தருளேயன்றோ பராபரமே.

எட்டுத்திசையுமொன்று யின்பமாய்நின்றவுன்னை
விட்டுப்பிரியவிடார் வேறோபராபரமே. 338

பிரியாதுயிர்க்குயிராய்ப் பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவே சிவமேபராபரமே. 339

ஏதேதுசொன்னாலு மெள்ளளவுநீயிரங்காச்
சூதேதெனக்குளவு சொல்லாய்பராபரமே. 340

கற்பனையாய் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலை
யுஞ், சொற்பனத்துங் காணேனென் சொல்வேன்பரா
பரமே. 341

வன்பொன்றுநீங்கா மனதிறப்பமாருப்பே
ரன்பொன்றும்போது மெனக்கையாபராபரமே. 342

ஏதுந்தெரியா வெளியேயெனைவாவெனநின்
போதநிலைகாட்டிற் பொருதோபராபரமே 343

ஓராமலெல்லா மொழிந்தேதற்குன்றெய்வவரு
டாராதிருக்கத் தகுமோபராபரமே. 344

மோனந்தருஞான மூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கையருளாய்பராபரமே. 345

வாடுமுகங்கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங்கருணை நிறைவேபராபரமே. 346

புந்தியினுனின்னடியைப் போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிறப்போநின் றியானம்பராபரமே 347

உனக்குவமையாககருணை யுள்ளவருமவலைமைக
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே 348

தாயிருந்தும்பிள்ளை தளர்ந்தாற்போலெவ்விடத்து
நீயிருந்துநான்றளர்ந்து நின்றேன்பராபரமே. 349

வாயாற்கிணறுகெட்ட வாறேபோல்வாய்பேசிப்
பேயானார்க்கின்பமுண்டோ பேசாய்பராபரமே. 350

பாவமென்றுமேலேதும் பயமின்றிச்செய்யவிந்தச்
சிவனுக்காபோதந் தெரித்தார்பராபரமே. 351

இன்பநிருவிகற்ப மின்றேதாவன்றெனிலோ
அன்பம்பொறாப்பரிதுசொன்னேன்பராபரமே. 352

கற்குநிலைகற்றுற் கருவியவிழாதருளாய்
நிற்குநிலைகற்பதுவே நீதம்பராபரமே 353

காச்சச்சுடர்விடும்பொற் கட்டிபோனின்மலமாய்ப்
பேச்சற்றவரே பிறவார்பராபரமே. 354

பற்றொழிந்துசிந்தைப் பதைப்பொழிந்துதானேதா
னாற்றிருப்பதென்றைக் கமைப்பாயபராபரமே. 355

உருவெளிதான்வாதவூ ருக்தமர்க்கல்லாலினமுங்
குருவழிநின்றார்க்குமுண்டோ கூறாய்பராபரமே

தேகமியாதேனுமொரு சித்திபெறச்சீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறி யையாபராபரமே. 357

உலகநெறிபோற்சடல மோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்த வியல்போபராபரமே. 358

பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந், திரமேதுமில்லைநன்றாத்தேர்ந்தேன்பராபரமே.

தேடுவோனின்னருளைத் தேடுமுன்னேயெய்தினட
மாடுவேனானந்த மாவேன்பராபரமே 360

உள்ளங்குழைய வுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்று காண்பேன்பராபரமே. 361

பட்டப்பகல்போலப் பாழ்த்தசிந்தைமாளினெல்லா
ம், வெட்டவெளியாக விளங்கும்பராபரமே. 362

பார்க்கினனுப் போற்கிடந்தபாழுஞ் சிந்தைமாளி
னென்னை, யார்க்குச்சரியிடலா மையாபராபரமே.

பாட்டுக்கோவன்பினுககோ பத்திக்கோவன்பர்தங்க
ணீட்டுகெகெல்லாங்குறிகி நின்றாய்பராபரமே. 364

முத்தாந்தவித்தே முளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச் சிறப்பேபராபரமே 365

உன்னுவெளியா யுறங்காதபேருணர்வா
யென்னுவிக்குள்ளே யிருந்தாய்பராபரமே 366

தத்துவமெல்லாமகன்ற தன்மையர்க்குச்சின்மயமா
நித்தமுந்தகத்த நிறைவேபராபரமே. 367

உள்ளக்கொதிப்பகல வுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்கருணை வேண்டும்பராபரமே. 368

என்னைப்புரப்பதரு ளின்கடனுமென்கடனு
நின்னிற்பணியறவே நிற்கைபராபரமே. 869

தானேயாகன்னிலையைத் தந்தவருளானந்த
வானேமனோதீத வாழ்வேபராபரமே. 370

மண்ணாதிபூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறை
வைக், கண்ணாரக்கண்டு களித்தேன்பராபரமே. 371

அறியாமையீதென் றறிவித்தவன்றேதான்
பிறியாவருணிலையும் பெற்றேன்பராபரமே. 372

நீதெனவுநன்றெனவுந் தேர்ந்துநான்றேர்ந்தபடி
யேநடக்கவொட்டா தென்னேபராபரமே. 373

கண்டவறிவகண்டா காரமெனமெய்யறிவிற்
கொண்டவர்க்கேமுத்தி கொடுப்பாய்பராபரமே. 374

ஈறுகவல்வினைநா னென்னுமலின்பசுகம்
பேறும்படிக்கடிமை பெற்றேன்பராபரமே. 375

பெற்றா ரனுபூதி பேசாதமோனநிலை
கற்றாருனைப்பிரியார் கண்டாய்பராபரமே 376

நீயேநானென்று நினைப்புமறப்புமறத்
தாயேயனையவரு டந்தாய்பராபரமே. 277

சஞ்சலமற்றெல்லாநீ தானென்றுணர்ந்தேனென்
னஞ்சலியுங்கொள்ளா யரசேபராபரமே. 378

பூதமுதனாதவரை பொய்யென்றமெய்யரெல்லாங்
காதலித்தவின்பக் கடலேபராபரமே. 379

வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால்வெ
வ்வேறாய்ப, போக்குடைய வார்த்தை பொருந்தேன்
பராபரமே. 380

வன்மையின்றியெல்லாமதித் துணர்வாய்க்காகெடு
வேன், றன்மையொன்றுந் தோயாத் தடையேபரா
பரமே. • 381

பத்தர்சித்தர்வாழிபரி பக்குவர்கள்வாழிசெங்கோலை
வைத்தவர்கள்வாழிகுரு வாழிபராபரமே. 382

நல்லாரேனுணாலுங் கற்றுணர்ந்தமெய்யடியார்
சொல்லாலேநின்னைத் தொடர்ந்தேன்பராபரமே.

சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச்சுகங்
கொடுத்த, நல்லுரைக்கே கொத்தடிமை நான்காண்
பராபரமே. 384

மூத்திக்குவித்தான மோனக்கரும்புவழி
தித்தித்திடவிளைந்த தேனேபராபரமே. 385

'த்திரையும்பாழ்த்த நினைவுமற்றுநிற்பதுவோ
சுத்தவருணிலைநீ சொல்லாய்பராபரமே. 386

மண்ணுமறிகடலு மற்றுள வுமெல்லாமுன்
கண்ணிலிருக்கவுநான் கண்டேன்பராபரமே. 387

பூட்டிவைத்துவஞ்சப் பொறிவழியேயென்றனைநீ
யாட்டுகின்றதேதோ வறியேன்பராபரமே. 388

பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்
தே, னுய்யும்வகையு முளதோபராபரமே. 389

திருச்சிற்றம்பலம்.

---

## பைங்கிளிக்கண்ணி.

அந்தமுடனாதி யளவாமலென்னறிவிற்
சுந்தரவான்சோதி துலங்குமோபைங்கிளியே. 1

அகமேவுமண்ணலுக்கென் னல்லலெல்லாஞ்சொல்லிச்
சுகமானநீபோய்ச் சுகங்கொடுவாபைங்கிளியே. 2

ஆவிக்குளாவியெனு மற்புதனார்சிற்சுகந்தான்
பாவிக்குங்கிட்டுமோ சொல்லாய்நீபைங்கிளியே. 3

ஆருமறியாமலெனை யந்தரங்கமாகவந்து
சேரும்படியிறைக்குச் செப்பிவாபைங்கிளியே. 4

ஆறுனகண்ணீர்க்கென் னங்கபங்கமானதையுங்
கூறுததென்னோ குதலைமொழிப்பைங்கிளியே. 5

இன்பருளவாடையமுக் கேறுமெமக்கண்ணல்சுத்த
மெய்ப்பரமாமாடை யளிப்பானோபைங்கிளியே. 6

உன்னுடனொன் றிரண்டென் றோராமல்விட்டுநேறி
சொன்னான்வரவும்வகை சொல்லாய்நீபைங்கிளியே.

ஊருமிலார்பேருமிலா ருற்றார்பெற்றாருடனே
யாருமிலாரென்னை யறிவாரோபைங்கிளியே. 8

ஊரைப்பா ராமலெனக் குள்ளகத்து நாயகனார்,
சீரைப்பார்த்தாற்கருணை செயவாரோபைங்கிளியே.

என் றுவிடியுமிறைவாவோவென்றென்று
நின்றநிலையெல்லா நிகழ்த்தாய்நீபைங்கிளியே. 10

எந்தமடலூடு மெழுதாவிறைவடிவைச், சிந்தைமட
லாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே. 11

கண்ணுண்மணிபோலின்பங் காட்டியெனைப்பிரிந்த
திண்ணியருமின்னம்வந்துசேர்வாரோபைங்கிளியே.

ஏடாமலர்சூடே னெம்பெருமான்பொன்னடியாம்
வாடாமலர்முடிக்கு வாய்க்குமோபைங்கிளியே. 13

கல்லேன்மலரேன் கனிந்தவன்பேபூசையென்ற
நல்லோர்பொல்லாவெனையு நாடுவரோபைங்கிளியே.

கண்டதனைக்கண்டு கலக்கந்தவிரெனவே, விண்ட
பெருமானையுநான் மேவுவனோபைங்கிளியே. 15

காணாதகாட்சி கருத்துவந்துகாணாமல்
வீணாள்கழித்து மெலிவேனோபைங்கிளியே. 16

காந்தமிரும்பைக் கவர்ந்திழுத்தாலென்னவருள்
வேந்தனெனையிழுத்து மேவுவனோபைங்கிளியே. 17

காதலால்வாடினதுங் கண்டனையேயெம்மிறைவர்
போதரவாயின்பம் புசிப்பேனோபைங்கிளியே. 18

கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப்பலவடி
கொள், பட்டிக்குமின்பமுண்டோ சொல்லாய்நீபை
ங்கிளியே. 19

கிட்டோராய்நெஞ்சிற் கிளர்வார்தழுவவென்று
னெட்டோராவரவர் நேசமென்னோபைங்கிளியே. 20

கூறுங்குணமுமில்லாக் கொள்கையினரென்கவலை
யாறும்படிக்கு மணவாரோபைங்கிளியே. 21

சின்னஞ்சிறியேன்றன் சிந்தைகவர்ந்தாரிறைவர்
தன்னந்தனியே தவிப்பேனோபைங்கிளியே. 22

சிந்தைதமருளைத் தெளிவித்தென்னையாள
வந்தகுருநாதனருள் வாய்க்குமோபைங்கிளியே. 23

சொல்லிறந்துநின்ற சுகரூபப்பெம்மானை
யல்லும்பகலு மணைவேனோபைங்கிளியே. 24

தற்போதத்தாலே தலைகீழதாகவைய
னற்போதவின்புற நாட்செலுமோபைங்கிளியே 25

தன்னையறியுந் தருணந் தனிற்றலைவ, ரென்னையு
ணையாதவண்ண மெங்கொளித்தார் பைங்கிளியே. 26

தாங்கரிய மையலெல்லாந் தந்தென்னைவிட் டின்னரு
ளாம், பாங்கியையாச் சேர்ந்தாரிறைக்குப் பண்போசொல்
பைங்கிளியே. 27

தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டே யண்
ணலிடத், தோவியம்போனிற்கினெனை யுள்குவரோ
பைங்கிளியே. 28

தீராகருவழக்கைத் தீர்வையிட்டங்கென்னையினிப்
பாரேறுதாண்டானைப் பற்றுவனோபைங்கிளியே. 29

தூங்கிவிழித்தென்னபலன் றூங்காமற்றூங்கி நிற்
கும், பாங்குகண்டாலன்றோ பலன்காண்பேன் பைங்
கிளியே. 30

தொல்லைக்கவலை தொலைத்துத்தொலையாத
வெல்லையிலாவின்பமய மெயதுவனோபைங்கிளியே.

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந்தின்
பணைந்தார், வன்னெஞ்சத் தானான் வாழ்விழந்
தேன் பைங்கிளியே 32

நானைகருதின்வர நாடாாசும்மாவிருந்தாற்
றானைபணைவரவா தன்மையன்றோபைங்கிளியே. 33

நீாகருமிழிபோன்றவுட னிற்கையிலேசாசுவதஞ்
சோக்கவறியாமற் றிகைப்பேனோபைங்கிளியே. 34

நெஞ்சகத்தில்வாழ்வார் நினைக்கின்வேறென்றணை
யார், வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்றோ பைங்
கிளியே 35

பன்முத்திரைச்சமயம் பாழ்படக்கல்லாலடிவாழ்
சின்முத்திரையரசைச சேர்வேனோபைங்கிளியே. 36

பச்சைகண்டநாட்டிற் பறக்குமுனைப்போற்பறந்தே
னிச்சையெல்லா மண்ணாற்கியம்பிவாபைங்கிளியே. 37

பாசபந்தஞ்செய்ததுன்பம் பாராமலெம்மிறைவ
ராசைதந்ததுன்பமதற் காற்றேனென்பைங்கிளியே. 38

பாராசையற்றிறையைப் பற்றறநான்பற்றிநின்ற
பூராயமெல்லாம் புகன்றுவாபைங்கிளியே. 39

பேதைப்பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவ
முன், சோதித்தவண்ணல்வந்து தோய்வாரோபைங்
கிளியே. 40

பைம்பயிரைநாடுமுன்போற் பாராபூத்தபைங்கொ
டிசேர், செம்பயிரைநாடித் திகைத்தேனே பைங்
கிளியே. 41

பொய்க்கூடுகொண்டு புலம்புவனோவெம்மிறைவர்
மெய்க்கூடுசென்று விளம்பிவாபைங்கிளியே. 42

பொய்ப்பணி வேண்டேனைப் பொருட்படுத்திய
ண்ணலென்பான், மெய்ப்பணியுந் தந்தொருகான் மே
வுவனோ பைங்கிளியே. 43

மண்ணுறங்கும் விண்ணுறங்கு மற்றுள வெலாமு
றங்கும், கண்ணுறங்கேனெம்மிறைவர் காதலாற்பைங்
கிளியே. 44

மட்டுப்படாத மயக்கமெல்லாந் தீரவென்னை, வெ
ட்டவெளிவீட்டிலண்ணன் மேவுவனோபைங்கிளியே.

விண்ணுள் வளியடங்கி வேறற்றதென்ன வருட்
கண்ணுளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே. 53

விண்ணூர் நிலவுதவழ் மேடையி லெல்லாருமுற,
மண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னோ பைங்
கிளியே. 54

உள்ளத்தினுள்ளே பொளித்திருந்தென் கள்ள
மெல்லாம், வள்ளலறிந்தாலெனக்கு வாயுமுண்டோ
பைங்கிளியே. 55

ஆகத்தைநீக்குமுன்னே யாவித்துணைவரைநான்
றுகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே. 56

தானேசுபாவந் தலைப்படநின்றுன்ஞான
வூனானவரும் வருவாரோ பைங்கிளியே. 57

கள்ளத்தலைவரவர் கைகாட்டிப்பேசாம
லுள்ளத்தில்வந்த வுபாயமென்னோ பைங்கிளியே. 58

திருச்சிற்றம்பலம்.

---

## எந்நாட்கண்ணி.

### தெய்வவணக்கம்.

நீர்பூத்தவேணி நிலவெறிப்பமன்றுடுங்
கார்பூத்தகண்டனையான் காணுநாளெந்நாளோ. 1

பொன்னுருமன்றுண்மணியும் [illegible]வைவிழிவண்டுசுற்று
மென்னாரமுதினல மீச்சிப்பதெந்நாளோ.

நீக்கிமலக்கட்டறுத்து நேரேவெளியிலெம்மைத்
தூக்கிவைக்குந்தாளைத் தொழுதிடநாளென்றோ. 3

கருமுகங்காட்டாமலென்றுங் கர்ப்பூரம்வீசுந்
திருமுகமேநோக்கித் திருக்களிப்பதெந்நாளோ. 4

வெஞ்சேலெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினை
ரை, யஞ்சேலெனுங்கைக் கபயமென்பதெந்நாளோ.

ஆறுசமயத்து மதுவதுவாய்நின்றிலங்கும்
வீறுபரைதிருத்தாண் மேவுநாளெந்நாளோ. 6

பச்சைநிறமாய்ச்சிவந்த பாகங்கலந்திலகை
யிச்சையுடனின்றாளை யுரங்காண்பதெந்நாளோ. 7

ஆதியந்தங்காட்டா தகண்டிதமாய்நின்றுணர்த்தும்
போதவடிவாமடியைப் போற்றுநாளெந்நாளோ. 8

கங்கைநிலவுசடைக் காட்டானைத் தந்தையெனு
ம், புங்கவெண்கோட்டானைபதம் புந்திவைப்பதெந்
நாளோ. 9

அஞ்சமுகங்காட்டாமூ லாறுமுகங்காட்டவந்த
செஞ்சரணச்சேவடியை [illegible]

தந்தையிருதாடேணித்துந் தம்பிரான்றாள்சேர்ந்த
வெந்தையிருதாளிணைக்கே யின்புறுவதெந்நாளோ.

திருச்சிற்றம்பலம்.

---

## குருமாபின் வணக்கம்.

தூய்யகரமலராற் சொல்லாமற்சொன்னவுண்மை
யையனைக்கல்லாலரசை யாடிணைவதெந்நாளோ. 1

சிந்தையினுக்கெட்டாத சிற்சுகத்தைக்காட்டவல்ல
நந்தியடிக்கீழ்க்குடியாய் நாமணைவதெந்நாளோ. 2

எந்தைசனற்குமர ஞதியெமையாட்கொள்வான்
வந்ததவத்தினரை வாழ்த்துநாளெந்நாளோ. 3

பொய்கண்டார்காணாப் புனிதமெனுமத்துவித
மெய்கண்டநாதனருள் மேவுநாளெந்நாளோ. 4

பாதிவிருத்தத்தாலிப் பார்விருத்தமாகவுண்மை, சா
தித்தார்பொன்னடியைத் தான்பணிவதெந்நாளோ. 5

சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந்தில்லைநகர்க்
கொற்றங்குடிமுதலைக் கூறுநாளெந்நாளோ. 6

குறைவிலருண்ஞானமுதல் கொற்றங்குடியடிகள்
[illegible]பணிவதெந்நாளோ.

நீர்க்குமிழி பூணமைத்து நின்றானில்லாமெய்
பார்க்குமிடத்திதன்மேற் பற்றறுவதெந்நாளோ. 2

காக்கைநரிசெந்நாய் கழுகொருநாட்கூடியுண்டு
தேக்குமிருந்தாமுடலைச் சீயென்பதெந்நாளோ. 3

செங்கிருமியாதி செனித்தசென்மபூமியினை
யிங்கெனுடலென்னு மிழுக்கொழிவதெந்நாளோ. 4

தத்துவர்தொண்ணூற்றறுவர் தாமாயவாழிநாட்
டைப், பித்தனெனென்னும்பிதற்றொழிவதெந்நாளோ.

உளனென்றிநாத னுணர்த்துமந்தைவிட்டறிவே
னெனென்றபாவிதலை நாணுநாளெந்நாளோ. 6

வேலையிலாவேதன் விதித்தவிந்த்ரசாலவுடன்
மாலைவியாபார மயக்கொழிவதெந்நாளோ. 7

ஆழ்ந்துநினைக்கி னரோசிகமாவிவ்வுடலில்
வாழ்ந்துபெறும்பேற்றை மதிக்குநாளெந்நாளோ. 8

மும்மலச்சேறான முழுக்கும்பிபாகமெனு
மிம்மலகாயத்து னிகழ்ச்சிவைப்பதெந்நாளோ. 9

நாற்றமிகக்கூட்டு நவவாயில்பெற்றபசுஞ்
சோற்றுத்துருத்தி சுகமென்பதெந்நாளோ 10

உருவிருப்பவுள்ளேதா னாறுமலக்கேணி, யருவ
ருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநாளெந்நாளோ. 11

திருச்சிற்றம்பலம்.

## மாதரைப் பழித்தல்.

மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப்
பொய்வீசும்வாயார் புலையொழிவதெந்நாளோ. 1

திண்ணியநெஞ்சப்பறவை சிக்கக்குழற்காட்டிற்
கண்ணிவைப்போர்மாயங் கடக்குநாளெந்நாளோ. 2

கண்டுமொழிபேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடுமாதர்பொய்க் கூத்தொழிவதெந்நாளோ. 3

காமனைவாவென்றிருண்ட கண்வலையைவீசுமின்னார்
நாமமறந்தருளை நண்ணுநாளெந்நாளோ. 4

கண்களில்வெண்பூளை காபப்பக்கருமையிட்ட
பெண்கண்மயறப்பிப் பிழைக்குநாளெந்நாளோ. 5

வீங்கித்தளர்ந்து விழுமுலையார்மேல்வீழ்ந்து
தூங்குமதன்சோம்பைத் துடைக்குநாளெந்நாளோ.

கச்சிருக்குங்கொங்கை கரும்பிருக்குமின்மாற்றும்
வைச்சிருக்குமாதர் மயக்கொழிவதெந்நாளோ. 7

பச்சென்றகொங்கைப் பசப்பியர்பாழானமய
னச்சென்றறிந்தருளை நண்ணுநாளெந்நாளோ. 8

உந்திச்சுழியா லுளத்தைச்சுழித்தகன
தந்தித்தனத்தார் தமைமறப்பதெந்நாளோ. 9

தட்டுவைத்தசேலைப்பூங் கொய்சகத்திற் சிந்தை
யெல்லாங், கட்டிவைக்கு மாயமின்னா ர் கட்டழிவதெ
ந்நாளோ. 10

ஆழாழியென்ன வளவுபடாவஞ்சநெஞ்சப்
பாழானமாதர்மயற் பற்றொழிவதெந்நாளோ. 11

தூயபனித்திங்கள் சுடுவதெனப்பித்தேற்று
மாயமடவார் மயக்கொழிவதெந்நாளோ. 12

ஏழைக்குறும்புசெய்யு மேந்திழையார்மோகமெனும்
பாழைக்கடந்து பயிராவதெந்நாளோ. 13

விண்டுமொழிகுளறி வேட்கைமது மொண்டுதருந்,
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ தெந்நா
ளோ. 14

மெய்யிற்சிவம்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்,
பொய்யிலின் பின்றென்று பொருந்தாநா ளெந்
நாளோ. 15

திருச்சிற்றம்பலம்.

---

## தத்துவமுறைமை.

ஐம்பூதத்தாலே யலக்கழிந்தேதோடமற
வெம்பூதநாதனரு ளெய்துநாளெந்நாளோ

சத்தமுதலாம்புலனிற் சஞ்சரித்தகள்வரேனும்
பித்தாபயந்திரிந்து பிழைக்குநாளெந்நாளோ. 2

நாளும்பொறிவழியை நாடாதவெண்ணமெனும்
யாளும்பொறியா லருள்வருவதெந்நாளோ, 3

வாக்காதியானகன்மமாயை தம்பால்வீண்காலம்
போக்காமலுண்மை பொருந்துநாளெந்நாளோ. 4

மனமானவானரக் கைம்மாலையாகாம
லெலையாளடிகளடி யெய்துநாளெந்நாளோ. 5

வேட்டைப்புலப்புலையர் மேவாதவண்ணமனக
காட்டைத்திருத்தி கழைகாண்பதெந்நாளோ. 6

உந்துபிறப்பிறப்பை யுற்றிடாதெந்தையருள்
வந்துபிறக்க மனமிறப்பதெந்நாளோ. 7

புத்தியெனுந்துத்திப் பொறியரவின்வாய்த்தேரை
யொத்துவிடாதெந்தையருளோங்குநாளெந்நாளோ.

ஆங்காரமென்னுமத யானைவாயிற்கரும்பா
யேங்காமலெந்தையரு ளெய்துநாளெந்நாளோ 9

சித்தமெனும்பௌவத்திரைக்கடலில்வாழ்துரும்பா
யித்தமிலாதருளி னிற்குநாளெந்நாளோ. 10

வித்தியாதத்துவங்க ளேழும்வருண்டோட
சுத்தபரயோகத்தைத் துய்க்குநாளெந்நாளோ.

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத், தத்துவத்தை நீங்கியருள் சாருநாளெந்நாளோ. 12

பொல்லாதகாமப் புலைத்தொழிலிலென்னறிவு
செல்லாமனன்னெறியிற் சேருநாளெந்நாளோ. 13

அடிகளடிக்கீழ்க்குடியா யாம்வாழாவண்ணங்
குடிகெடுக்கும்பாழ்மடிமைக்கூறொழிவதெந்நாளோ.

ஆனபுறக்கருவி யாறுபத்துமற்றுள்வும்
போனவழியுங்கூடப் புன்முளைப்பதெந்நாளோ. 15

அந்தகனுக்கெங்குமிரு ளானவாறுவறிவில்
வந்தவிருள்வேலை வடியுநாளெந்நாளோ. 16

புன்மலத்தைக் சேர்ந்துமல போதம்பொருந்துதல்போய், நின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநாளெந்நாளோ. 17

கண்டுகண்டுந்தேறாக் கலக்கமெல்லாந்தீர்வண்ணம்
பண்டைவினைவேரைப் பறிக்குநாளெந்நாளோ. 18

பைங்கூழ்வினைதான் படுசாவியாகவெமக்
கெங்கோன்கிரணவெயி லெய்துநாளெந்நாளோ. 19

குறித்தவிதமாதியாற் கூடும்வினையெல்லாம் [நாளோ.
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநாளெந்

சஞ்சிதமேயாதி சரக்கானமுச்சேறும்
வெந்தபொரியாகவருணமேவுநாளெந்நாளோ. 21

தேகமுதனன்காத் திரண்டொன்றாய்நின்றிலகு
மோகமிகுமாயை முடியுநாளெந்நாளோ. 22

சத்தமுதலீத் தழைத்திங்கெழக்குணர்த்துஞ்
சுத்தமாமாயை தொடக்கறுவதெந்நாளோ. 23

எம்மைவினையை யிறைமையெம்பாற்காட்டாத
வம்மைதிரோதை யகலுநாளெந்நாளோ. 42

நித்திரையாய்வந்து நினைவழிக்குங்கேவலமாஞ்
சத்துருவைவெல்லுஞ் சமர்த்தறிவதெந்நாளோ. 25

சின்னல்பின்னலான் சகலமெனுங்குப்பையிடை
முன்னவன்ஞானக்கனலைமூட்டுநாளெந்நாளோ. 26

மாயாவிகார மலமொழிசுத்தாவத்தை
தோயவருளைத் தொடருநாளெந்நாளோ 27

திருச்சிற்றம்பலம்

நன்னுண்மை.

உடம்பறியுமென்னுமந்த வூழெல்லாந்தீரத்
திடம்பெறவேயெனைத் தெரிசிப்பதெந்நாளே.

செம்மையறிவாலறிந்து தேகாதிக்குள்ளிசைந்த
வெம்மைப்புலப்பட்டேவேரமறிவதெந்நாளோ

தத்துவமாம்பாழ்த்த சடவுருவைத்தான்சுமந்த
சித்துருவாமெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ. 3

பஞ்சப்பொறியையுயி ரென்னுமந்தப்பஞ்சமறச்
செஞ்சவேயெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ. 4

அந்தக்கரணமுயி ராமென்றவந்தரங்க
சிந்தைக்கணத்திலெம்மைத் தேர்ந்தறிவதெந்நாளோ.

முக்குணத்தைசசீவனென்னு மூடத்தைவிட்டருளா, லக்கணமேயெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ. 6

காலையுயிரென்னுங் கலதிகள்சொற்கேளாமற்
சீலமுடனெம்மைத் தெளிந்துகொள்வதெந்நாளோ. 7

வான்கொடுத்துத்தேடு மதிகேடாபோலவெமை
நான்கெடுத்துத்தேடாம னன்கறிவதெந்நாளோ. 8

திருச்சிற்றம்பலம்.

---

## அருளியல்பு.

ஞானந்தருநா டிதுநமக்குவேண்டாமென்
றூனந்தநாட்டி லவதரிப்பதெந்நாளோ. 1

பொய்க்காட்சியான புல்லைத்தைவிட்டருளா
மெய்க்காட்சியாம்புல்லை மேவுநாளெந்நாளோ. 2

ஆதியந்தங்காட்டாம லம்பரம்போலேவிறைந்த
நீதியிலருட்டலைச் சேருநாளெந்நாளோ. 3

எட்டுத்திசைக்கீழ்மேலெங்கும்பெருகிவரும், வெட்ட
வெளிவிண்ணூற்றின் மெய்தோயவதெந்நாளோ. 4

சூதானமென்று சுருதியெல்லாமோலமிடு
மீதானமானவெற்பை மேவுநாளெந்நாளோ. 5

வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத்தண்ணரு
வாய், வந்துபொழிகின்றமழைகாண்பதெந்நாளோ. 6

சூரியர்கள்சந்திரர்க டோன்றாய்ச்சுயஞ்சோதிப்
பூரணதேயத்திற் பொருந்துநாளெந்நாளோ 7

கன்றுமனவெப்பக் கலகமெலாந்தீரவருட
டென்றல்வந்துவீசுவெளி சேருநாளெந்நாளோ. 8

கட்டுநடன்செங்கோல் கடாவுடிக்குங்கோலாச
வெட்டவெளிப்பொருளை மேவுநாளெந்நாளோ. 9

சாலக்கபாடத் தடைதீரவெம்பெருமா
னோலக்கமண்டபத்து ளோடுநாளெந்நாளோ. 10

விண்ணவன்றனென்னும் விரிநிலாமண்டபத்திற்
றண்ணீரருந்தித் தளர்வொழிவதெந்நாளோ

வெய்யபுலிபார்த்து விழித்திருந்தவல்லலற்றுத்
துய்யவருளிற் றுயிலுநாளெந்நாளோ.

வெய்யபிறவிவெயில் வெப்பமெலாம்விட்டகல
வையனடிநீழ லணையுநாளெந்நாளோ. 13

வாதைப்பிறவி வளைகடலைநீந்தவையன்
பாதப்புணையிணையைப் பற்றுநாளெந்நாளோ. 14

ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலேகாண வெளி, ஞானமெனுமஞ்சனத்தை நான்பெறுவதெந் நாளோ. 15

எல்லாமிறந்தவிடத் தெந்தைநிறைவாம்வடிவைப்
புல்லாமற்புல்லிப புணருநாளெந்நாளோ. 16

சடத்துளுயிர்போலெமக்குத் தானுயிராய்ஞான
நடத்துமுறைகண்டுபணி நாம்விடுவதெந்நாளோ. 17

ஏககனுமர்ந்துன்ப விருட்கடலைவிட்டருளாம்
மிக்ககரையேறி வெளிப்படுவதெந்நாளோ. 18

திருச்சிற்றம்பலம்.

---

## பொருளியல்பு.

கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போன் மெய்ஞ்ஞான, மெய்விளக்கின் பின்னேபோய் மெய் காண்பதெந்நாளோ. 1

[illegible]பசுபாசமெல்லாங் கீழ்ப்படவுந்தானேமே
லாடுஞ்சுகப்பொருளைக் கண்புறுவதெந்நாளோ.

ஆணவத்தைநீக்கி யறிவுடையைவகையாக்
காணவத்தைதக்கப்பாலைக் காணுநாளெந்நாளோ. 3

நீக்கப்பிரியா நினைக்கமறக்கக்கூடாப்
போக்குவரவற்ற பொருளினைவதெந்நாளோ. 4

அண்டருக்கு மெய்ப்பில்லைவப்பா மாரமுதையெ
ன்னகத்திற், கண்டுகொண்டுநின்று களிக்குநாளெந்
நாளோ. 5

காட்டுந்திருவருளே கண்ணாகக்கண்டுபர
வீட்டின்பமெய்ப்பொருளை மேவுநாளெந்நாளோ. 6

நானெனுந்தன்மை நழுவியேயெவ்வுயிர்க்குந்
தானெனவுண்மைதனைச் சாருநாளெந்நாளோ. 7

சிந்தைதமறந்து திருவருளாய்நிற்பவர்பால் [ளோ.
வந்தபொரு ளெம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நா

எள்ளுக்குளெண்ணெய்போ லெங்கும்வியாபகமா
யுள்ளவொன்றையுள்ளபடி யோருநாளெந்நாளோ. 9

அருவுருவமெல்லா மகன்றதுவாயான
பொருளெமக்குவந்து புலப்படுவதெந்நாளோ.

ஆரணமுங்காண வகண்டாகாரபரி
பூரணம்வந்தெய்தப் பொருந்துநாளெந்நாளோ

சத்தொடுசித்தாகித் தயங்கியவானந்தபரி
சுத்தவகண்டசிவந் தோன்றுநாளெந்நாளோ. 12

எங்கெங்கும்பார்த்தாலு மின்புருவாய்நீக்கமின்றித்
தங்குந்தனிப்பொருளைச் சாருநாளெந்நாளோ. 13

அடிமுடிகாட்டாதசுத்த வம்பரமாஞ்சோதிக்
கடிவெளிவந்தென்னைக் கலக்குநாளெந்நாளோ. 14

ஒன்றனையுங்காட்டா வௌத்திருளைச்சூறையிட்டு
நின்றபரஞ்சோதியுட னிற்குநாளெந்நாளோ. 15

எந்தச்சமய மிசைந்துமறிவூடறிவாய்
வந்தபொருளேபொருளா வாஞ்சிப்பதெந்நாளோ. 16

எவ்வாறிங்குற்றுணர்ந்தார் யாவரவர்தம்மைக
யவ்வாறாய்நின்றபொருட் கன்புவைப்பதெந்நாளோ.

பெண்ணாணலியெனவும் பேசாமலென்னறிவின்
கண்ணூடேநின்றவொன்றைக் காணுநாளெந்நாளோ.

நினைப்புமறப்புமற நின்றபரஞ்சோதி
தனைப்புலமாவென்னறிவிற் சந்திப்பதெந்நாளோ 19

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்தவியல்பு.

பேச்சுமூச்சில்லாத பேரின்பவெள்ளமுற்று
[illegible]காணமை னிற்குநாளெந்நாளோ. 1

சித்தந்தெளிந்தோர் தெளிவிற்றெளிவான
சுத்தசுககடலுட் டோயுநாளெந்நாளோ. 2

சிற்றின்பமுண்டுழ் சிதையவனந்தங்கடல்போன்
முற்றின்பவெள்ளமெமை மூடுநாளெந்நாளோ. 3

எல்லையில்பேரின்பமய மெப்படியென்றோர் தமக்குச், சொல்லறியாவூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ. 4

அண்டரண்டகோடி யனைத்துமுகாந்தவெள்ளங்
கொண்டதெனப்பேரின்பம் கூடுநாளெந்நாளோ. 5

ஆதியந்தமில்லாத வாதியனாதியெனுஞ்
சோதியின்பத்தூடே துலையுநாளெந்நாளோ. 6

சாலோகமாதி சவுக்கியமும்விட்டநம்பான்
மேலானஞானவின்ப மேவுநாளெந்நாளோ. 7

தற்பரத்தினுள்ளேயுஞ் சாலோகமாதியெனும்
பொற்பறிந்தானந்தம் பொருந்துநாளெந்நாளோ. 8

உள்ளத்தினுள்ளேதா னூறுஞ்சிவானந்த
வெள்ளந்துலைந்து விடாய்தீர்வதெந்நாளோ. 9

கன்னலுடன்முக்கனியுங் கற்கண்டுசீனியுமாய்
மன்னுமின்பவாரமுதை வாய்மடுப்பதெந்நாளோ. 10

மண்ணூடெழுன்ற மயக்கமெல்லாந்தீர்ந்திடவும்
விண்ணூடெழுந்தசுக மேவுநாளெந்நாளோ. 11

கானற்சலம்போன்ற கட்டுழலைப்பொய்தீர
வானமுதவாவி மருவுநாளெந்நாளோ. 12

தீங்கரும்பென்றாலினியா தின்றாலினிப்பனபோற்
பாங்குறாம்பேரின்பம் படைக்குநாளெந்நாளோ. 13

புண்ணியபாவங்கள் பொருந்தாமெய்யன்பரெல்லா
நண்ணியபேரின்பசுக நாமணைவதெந்நாளோ. 14

திருச்சிற்றம்பலம்.

---

## அன்பு நிலைமை.

தககரவிகண்ட சரோருகம்போலென்னிதய
மிககவருள்கண்டு விகசிப்பதெந்நாளோ. 1

வானமுகிலகண்ட மயூரபக்ஷிபோலவையன்
ஞானநடங்கண்டு நடிக்குநாளெந்நாளோ. 2

சந்திரனைநாடுஞ் சகோரபக்ஷிபோலறிவில்
வந்தபரஞ்சோதியையாம் வாஞ்சிப்பதெந்நாளோ 3

குத்திரமெய்ப்புற்றகத்துக் குண்டலிப்பாம் பொ
ன்றாட்டுஞ் சித்தனையென்கண்ணாற் றெரிசிப்பதெ
நாளோ. 4

அந்தரத்தேநின்றாடு மானந்தக்கூத்தனுக்கென்
சிந்தைதிறைகொடுத்துச் சேவிப்பதெந்நாளோ. 5

கள்ளனிவனென் றுமெள்ளக் கைவிடுதல்காரியமோ
வள்ளலேயென்று வருந்துநாளெந்நாளோ. 6

விண்ணுடர்காணு விமலாபரஞ்சோதி
யண்ணாவாவாவென் றரற்றுநாளெந்நாளோ. 7

ஏதேதுசெய்தாலு மென்பணிபோய்நின்பணியா
மாதேவாவென்று வருந்துநாளெந்நாளோ. 8

பண்டுங்காணேனுன் பழம்பொருளேயின்றுமுனைக்
கண்டுங்காணேனெனவுங் கைகுவிப்பதெந்நாளோ. 9

பொங்கேதமான புழுக்கூடெல்லாநீரவின்ப
மெங்கேயெங்கேயென் றிரங்குநாளெந்நாளோ. 10

கடலின்மடைதூண்டதுபோற் கண்ணீராறாக
வுடல்வெதும்பிமூர்ச்சித் துருகுநாளெந்நாளோ. 11

புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப் போனேனிற்காண
வலந்தேனென்றேங்கி யழுங்குநாளெந்நாளோ. 12

புண்ணீர்மையாளர் புலம்புமாபோற்புலம்பிக்
கண்ணீருங்கம்பலையுங் காட்டுநாளெந்நாளோ. 13

போற்றேனென் றாலுமென்னைப் புந்திசெய்யும்
வேதனைக்கிங், காற்றேனாற்றேனென் றரற்றுநாளெந்

பொய்ம்முடங்கும் பூம்சல ம்பொட்டலறப பூங்கமலன்
கைமுடங்கநான்சனனக கட்டறுவதெந்நாளோ. 15

கற்குணத்தைப் போன்றவஞ்சக் கர்ரர்கள்கைகோ வாம, னற்குணத்தார கைகோத்து நான்றிரிவதெந் நாளோ. 16

துட்டனைமாமாயைச் சுழனீக்கியந்தரமே
விட்டனையோவென்று வியக்குநாளெந்நாளோ. 17

திருச்சிற்றம்பலம்.

---

## அன்பர்நெறி.

அத்துவாவெல்லா மடங்கச்சோதித்தபடிச்
சித்துருவாய்நின்றார் தெளிவறிவதெந்நாளோ. 1

மூச்சற்றுச்சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப், பேச்சற்றோர் பெற்றவொன்றைப பெற்றிடுநாளெந் நாளோ. 2

கோட்டாலையான குணமிறந்தநிர்க்குணத்தோர்
தேட்டாலேதேடுபொருள் சேருநாளெந்நாளோ. 3

கெடுத்தே பசுத்துவத்தைக் தேடிலாவானந்த, மடுத்தோரடுத்தபொருட்கார்வம்வைப்பதெந்நாளோ. 4

கற்கண்டாலோடுகின்ற காக்கைபோற்பொய்ம்மாயச், சொற்கண்டாலோடுமன்பர் தோய்வறிவதெந் நாளோ. 5

மெய்த்தகுலங்கல்விபுனை வேடமெல்லாமோடவிட்ட
சித்தரொன்றுஞ்சேராச் செயலறிவதெந்நாளோ. 6

குற்றச்சமயக் குறும்படர்ந்துதற்போத
மற்றவர்கட்கற்பொருட் கன்புவைத்ததெந்நாளோ.

தர்க்கமிட்டுப்பாழாஞ் சமயக்குதர்க்கம்விட்டு
நிற்குமவர்கண்டவழி நேர்பெறுவதெந்நாளோ. 8

வீறியவேதாந்தமுதன் மிக்ககலாந்தவரை [ளோ
யாறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நா

கண்டவிடமெல்லாங் கடவுண்மய மென்றறிந்து, கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்பதெந்நாளோ. 10

பாக்கியங்களெல்லாம் பழுத்துமனம்பழுத்தோர்
நோக்குந்திருக்கூத்தை நோக்குநாளெந்நாளோ. 11

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள், செவ்வறிவைநாடிமிகச் சிந்தைவைப்பதெந்நாளோ. 12

திருச்சிற்றம்பலம்.

---

அறிஞநிலை.

இருநிலனுய்த்தியாகி யென்றதிருப்பாட்டின், பெருநிலையைக் கண்டிணைந்து பேசறிவ தெந்நாளோ.

அற்றவாகட்கற்றசிவ னுமென்றவத்துவித
முற்றுமொழிகண்டருளின் மூழ்குநாளெந்நாளோ. 2

நானென்னைமுன்படைத்தா னென்றதகவுரையை
நானென்னுவுண்மைபெற்றுநானுணர்வதெந்நாளோ.

என்னுடைய தோழனுமாமென்ற திருப்பாட்டி,
னன்னெறியைக்கண்டுரிமை நூஞ்செய்வதெந்நாளோ.

ஆருடனே சேரு மறிவென்றவவ்வுரையைத்
தேரும்படிககருடான் சேருநாளெந்நாளோ. 5

உன்னிலுன்னுமென்ற வுற்றமொழியாலென்னிதயந்
தன்னிலுன்னிநன்னெறியைச் சாருநாளெந்நாளோ.

நினைப்பற்வேதானினைநதே னென்றநிலைநாடி
யனைத்துமாமப்பொருளி லாழுநாளெநநாளோ. 7

சென்றசென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந்
தொன்றாகி, நின்றவிடுமென்றநெறி நிற்குநா ளெந்
நாளோ 8

ஆதியந்தமில்லா வரியபரஞ்சோதியென்ற
நீதிமொழிகண்டதுவாய் நிற்குநாளெந்நாளோ. 9

பிறிதொன்றிலாசையின்றிப் பெற்றிருந்தேனென்ற
நெறியுடையான்சொல்லினிலைநிற்குநா ளெந்நாளோ

திரையற்றநீர்போற் றெளியவெனத்தேர்ந்த
வுறைபற்றியுற்றங் கொடுகெகுநாளெந்நாளோ 11

அறியாவறிவி லவிழ்ந்தேறவென்ற
நெறியாமுறை யுணர்ந்து நிற்குநாளெந்நாளோ. 12

மனக்குணியென்று மியற்கையுமாய்ப்பின்னு
முனக்குறைனென்ற வுறுதிகொள்வதெந்நாளோ. 13

அறிவையறிவதுவே யாகும்பொருளென், றுறுதி
சொன்னவுண்மையினை யோருநாளெந்நாளோ. 14

திருச்சிற்றம்பலம்.

---

## நிற்குநிலை.

ஞானிசைபோலப் பரமன்பானினறதிற
நண்ணியருளாகி யிருக்குநாளெந்நாளோ 1

அறிவோடறியாமை யற்றறிவினூடே
குறியிலறிவுவந்து கூடுநாளெந்நாளோ. 2

சொல்லான்மனத்தாற் றொடராச்சம்பூரணத்தி
னில்லாநிலையாய் நிலைநிற்பதெந்நாளோ. 3

செங்கதிரின்முன்மதியந் தேசடங்கிநின்றிடல்போ
லங்கணனார்தாளி லடங்குநாளெந்நாளோ. 4

வானூடடங்கும் வளிபோலவின்புருவாங்
கோனூடடங்குங் குறிப்பறிவதெந்நாளோ 5

செப்பரியதண்கருணைச் சிற்சுகனார்பூரணத்தி
லெப்பிணியுமில்லா யமையுநாளெந்நாளோ. 6

தூயவறிவான சுகரூபசோதிதன்பாற
றீயினிரும்பென்னத் திகழுநாளெந்நாளோ. 7

தீதணையாகர்ப்பூர தீபமெனநானகண்ட
சோதியிடனொன்றித் துரிசறுவதெந்நாளோ. 8

ஆராருங்காணாத வற்புதனார்பொற்படிக்கீழ்
நீரார்நிழல்போ னிலாவுநாளெந்நாளோ. 9

எட்டத்தொலையாத வெந்தைபிரான்சந்நிதியில்
பட்டப்பகல்விளக்கா பண்புறுவதெந்நாளோ. 10

கருப்புவட்டைவாய்மடுத்துக் கண்டார்நாப்போல
விருப்புவட்டாவின்புருவை மேவுநாளெந்நாளோ. 11

துச்சப்புலனாற் சுழலாமற்றண்ணருளா
லுச்சிக்கதிர்ப்படிக மொவ்வுநாளெந்நாளோ. 12

இம்மாநிலத்தி லிருந்தபடியேயிருந்து
சும்மாவருளைத் தொடருநாளெந்நாளோ 13

தானவனுந்தன்மையெய்தித் தண்டமெனவண்ட
மெங்கு, ஞானமதயானை நடத்துநாளெந்நாளோ. 14

ஒன்றிரண்டு மில்லதுவா யொன்றிரண்டுமுள்ளது
வாய், நின்றசமத்துநிலை நேர்பெறுவதெந்நாளோ. 51

பாசமகலாமற் பதியிற்கலவாமல்
மாசில்சமத்துமுத்தி வாய்க்குநாளெந்நாளோ. 16

சிற்றறிவுமெள்ளச் சிதைந்தெம்மான்பேரறிவை
யுற்றறியாவண்ணமறிந் தோங்குநாளெந்நாளோ. 17

தந்திரத்தைமந்திரத்தைச் சாரினையாமறிவென்
றெந்தையுணர்வேவடிவா லெய்துநாளெந்நாளோ 18

போக்குவரவற்றவெளி போனிறைந்தபோதனிலை
நீக்கமறக்கூடி நினைப்பறுவதெந்நாளோ. 19

காண்பானுங்காட்டுவதுங் காட்சியுமாய்நின்றவந்த
வீண்பாவம்போயதுவாய் மேவுநாளெந்நாளோ. 20

வாடாதேநானுவாய் மாயாதயெங்கோவை
நாடாதநாடி நலம்பெறுவதெந்நாளோ. 21

ஆடலையேகாட்டியெம தாடலொழித் தாண்டான்
பொற், றாடலைமேற்சூடித் தழைக்குநாளெந்நாளோ.

மேலொடுகீழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுநீர்போற்கலந்து பண்புறுவதெந்நாளோ. 23

அறியாதறிந்தெமையா ளண்ணலைநாமாகக்
குறியாதவண்ணங் குறிக்குநாளெந்நாளோ. 24

ஓராமன்மந்திரமு முன்னுமனம்பரனைப்
பாராமற்பார்த்துப் பழகுநாளெந்நாளோ. 25

ஊன்பற்றுமென்றோ டுறவுபற்றும்பூரணன்பால்
வான்பற்றுங்கண்போன் மருவுநாளெந்நாளோ. 26

ஆண்டான்மவுனி யளித்தவறிவாலறிவைத்
தாண்டாமற்றாண்டித் துலங்குநாளெந்நாளோ. 27

ஆணவத்தோடத்துவித மானபடிமெய்ஞ்ஞானத்
தாணுவினோடத்துவிதஞ் சாருநாளெந்நாளோ. 28

திருச்சிற்றம்பலம்.

## நிலைபிரிந்தோர் கூடுதற்குபாயம்.

கன்மநெறிதப்பிற் கடுநரகென்றெந்நாளு
நன்மைதருஞானநெறி நாமணைவதெந்நாளோ. 1

ஞானநெறிதானெ நழுவிடினுமுப்பதத்து
வானமுத்திநல்குமென வன்புறுவதெந்நாளோ. 2

பன்மார்க்கமான பலவடிபட்டேனுமொரு
சொன்மார்க்கங்கண்டு துலங்குநாளெந்நாளோ. 3

அத்துவிதமென்ற வங்கியச்சொற்கண்டுணர்ந்து
சுத்தசிவத்தைத் தொடருநாளெந்நாளோ. 4

கேட்டன்முதனான்காலே கேடிலாநாற்பதமும்
வாட்டமறவெமக்கு வாய்க்குநாளெந்நாளோ. 5

என்னதியானென்பதற வெவ்விடமுமென்றுசான்
சன்னிதியாக்கண்டுநிட்டை சாதிப்பதெந்நாளோ. 6

நாம்பிரமமென்று னடுவேயொன்றுண்டாமா
றேம்பியெலலாமொன்றாய்த் திகழுநாளெந்நாளோ. 7

முச்சகமேயாதி முழுதுமகண்டாகார
சச்சிதானந்தசிவந் தானென்பதெந்நாளோ. 8

எவ்வடிவும்பூரணமா மௌநதையுருவென்றிசைநத
வவ்வடிவுக்குள்ளே யடங்குநாளெந்நாளோ 9

சிந்தித்ததெல்லாஞ் சிவபூரணமாக
வந்தித்துவாழ்த்தி வணங்குநாளெந்நாளோ. 10

தாங்கியபார்விண்ணாதி தானேஞானக்கினியா
யோங்குமியோகவுணர் வுற்றிடுநாளெந்நாளோ. 11

ஆசனமூர்த்தங்க ளறவகண்டாகாரசிவ
பூசைசெயவாசை பொருந்துநாளெந்நாளோ. 12

அஞ்செழுத்தினுண்மை யதுவானவப்பொருளே
நெஞ்செழுத்தியொன்றாகி நிற்குநாளெந்நாளோ. 13

அவ்வுயிர்போலெவ்வுயிரு மானபிரான்றன்னடிமை
யெவ்வுயிருமென்றுபணி யாஞ்செய்வதெந்நாளோ

தேசிகர்கோனை திறன்மவுனிநந்தமக்கு
வாசிகொடுக்க மகிழுநாளெந்நாளோ 15

குருலிங்கசங்கமமாக் கொண்டதிருமேனி
யருண்மயமென்றன்புற் றருள்பெறுவதெந்நாளோ.

திருச்சிற்றம்பலம்.

## காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந்தோறுந் தெவிட்டாவமுதேயென்
புந்திக்குணீதான் பொருந்திடவுங்காண்பேனோ. 1

கேவலத்தினுன்கிடந்து கீழ்ப்படாதின்பவருட்
காவலன்பாலொன்றிக் கலந்திடவுங்காண்பேனோ. 2

துரியங்கடந்தவொன்றே தூவெளியாய்நின்ற
பெரியநிறைவேயுனைநான் பெற்றிடவுங்காண்பேனோ.

மாசற்றவன்பர்நெஞ்சே மாறாதபெட்டகமாத்
தேசுற்றமர்மணிநின் றேசினையுங்காண்பேனோ. 4

மாயாவிகார மலமகலவெந்தைபிரா
னேயானுபூதி நிலைபெறவுங்காண்பேனோ. 5

பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே, மெய்யனினை மெய்யெனவேமெய்யுடனே காண்பேனோ. 6

பாலற்றபட்டமெனு மாயாமனப்படலங்
காலற்றுவீழவுமுக் கண்ணுடையாய்காண்பேனோ 7

உள்ளும்புறம்பு மொருபடித்தாய்நின்றுசுகங்
கொள்ளும்படிக்கிறைநீ கூட்டிடவுங்காண்பேனோ. 8

காட்டுகின்றமுக்கட் கரும்பேகனியேயென்
றேட்டமெல்லாந்தீரவுன தாடலையுங்காண்பேனோ. 9

தூங்காமற்றூங்கிச சுகப்பெருமானின்னிறைவி
னீங்காமனிற்கு நிலைபெறவுங்காண்பேனோ. 10

வாதவூராளிதனை வான்கருணையால்விழுங்கும்
போதவூரேறேநின் பொன்னடியுங்காண்பேனோ 11

சாட்டையிலாப் பம்பரம்போலாடுஞ்சடசால
நாட்டமறவெந்தைசுத்த ஞானவெளிகாண்பேனோ. 12

மன்றுடும்வாழ்வே மரகதஞ்சேர்மாணிக்கக்
குன்றேநின்றாட்கீழ்க் குடிபெறவுங்காண்பேனோ. 13

பொய்யென் றறிந்துமெமைப் போகவொட்டாதை
யவித்தை வையங்கனமயக்கமாற்றிடவுங்காண்பேனோ.

தாயினுநல்லதயாளுவே நின்னையுன்னித், தீயின்
மெழுகொத்துருகுஞ் சிந்தைவரக்காண்பேனோ. 15

என்செயினு மென்பெறினு மென்னிறைவாவே
யையன்யா, னின்செயலென் றுன்னு நினைவுவரக்
காண்பேனோ. 16

எள்ளத்தனையு மிரக்கமிலாவன்பாவி
யுள்ளத்துமெந்தை யுலாவிடவுங்காண்பேனோ. 17

வஞ்சகத்துக்காலயமாம் வல்வினையேனுக்குவே
னெஞ்சகத்தியலைாநீ நேர்பெறவுங்காண்பேனோ. 18

தொல்லைபிறவித் துயர்கெடவுமெந்தைபிரான்
மல்லற்கருணை வழங்கிடவுங்காண்பேனோ. 19

வாளாருங்கண்ணார் மயற்கடலிலாழ்ந்தேன்சற்
றாளாகவெந்தை யருள்செயவுங்காண்பேனோ. 20

பஞ்சாய்ப்பறக்குநெஞ்சம் பாவியைநீகூவியையா
வஞ்சாதேயென்றின் னருள்செயவுங்காண்பேனோ. 21

ஆடுகெறங்காகி யலமந்துழன்றுமனம்
வாடுமெனையையாநீ வாவென்னவுங்காண்பேனோ. 22

சிட்டர்க்கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்றவாசை யொழியக்கறவுங்காண்பேனோ. 23

உண்ணின்றுணர்ந்து முலப்பிலாவொன்றேநின்
றண்ணொன்றசாநதவருள் சார்ந்திடவுங்காண்பேனோ.

ஒடுங்கருத்தொடுங்க வுள்ளுணர்வுந்தூன்றநினைக்
கூடும்படிக்கிறைநீ கூட்டிடவுங்காண்பேனோ. 25

வாக்கான்மனத்தான் மதிப்பரியாய்நின்னருளை
நோக்காமனேக்கிநிற்கு நுண்ணறிவுகாண்பேனோ 26

இவ்வுடம்புநீங்குமுனே யெந்தாய்கேளின்னருளா
மவ்வுடம்புக்குள்ளே யவதரிக்ககாண்பேனோ 27

நித்தமாயொன்றாய நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளிநீ வெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ. 28

கண்ணிறைநதமௌனக் கருத்தேயென் கண்ணே
யென், னுண்ணிறைந்தமாயை யொழிந்திடவுங் காண்பேனோ 29

அத்தாவிமலா வருளானவானநத
சித்தாவெனக்குனருள் செய்திடவுங்காண்பேனோ 30

வீணேபிறந்திறந்து வேசற்றேனாசையறக்
காணேணிறைநின் கருணைபெறக்காண்பேனோ. 31

சட்டையொத்த விம்படலைத் தள்ளுமுன்னே நமன்சகச, நிட்டையைப் பெற்றையா நிருவிகற்பங்காண்பேனே. 32

எல்லாந்தெரியுமிறைவா வென்னல்லலெல்லாஞ் சொல்லாமுனீதான் றெருத்திரங்கக்காண்பேனே 33.

அண்டபகிரண்ட மனைத்துமொருபடித்தாக் [னே கண்டவாகள்கண்டதிருக் காட்சியையுங் காண்பே

உளனிருந்த காயமுடனிருப்பவெந்தை நின்பால், வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனே. 35

தினையத்தனையுந் தெளிவறியாப்பாவியேன், வினையிற்பரம்பொருணீ நேர்பெறவுங்காண்பேனே. 36

துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிடவையாவே, யின்பவெள்ளம்வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனே. 37

திருச்சிற்றம்பலம்.

## ஆகாதோவென்கண்ணி.

கல்லாதநெஞ்சங் கரைந்துருகவெத்தொழிற்கும் வல்லாய்நின்னின்பம் வழங்கினலாகாதோ. 1

என்னையறிய வெனக்கறிவாய்நின்னருணின்
றன்னையறிநிநின்பநலஞ் சாரவைத்தாலாகாதோ. 2

பொய்ம்மையமேயான புரைதீரவெநதையின்ப
மெய்ம்மையம்வநதென்னைவிழுங்கவைத்தாலாகாதோ

மட்டிலாச்சிற்சுகமாம் வாழ்வேநின்னின்பமயா
சிட்டர்போலயானருநதித்தேககவைத்தாலாகாதோ

அத்தாநின்பொற்ற ளடிக்கேயனுதினமும்
பித்தாககியின்பம் பெருகவைத்தாலாகாதோ. 5

மெல்லியலார்மோக விழற்கிறைப்பேனையாநின
னெல்லையிலானந்தநல மிசசிந்தாலாகாதோ 6

சுட்டழகாயெண்ணுமனஞ் சூறையிட்டானந்தமயக
கட்டழகாநின்னைக கலக்கவைத்தாலாகாதோ. 7

சோதியேநநதாச் சுகவடிவேதூவெளியே
ஆதியேநின்னை யறியவைத்தாலாகாதோ. 8

நேசஞ்சிறிதுமிலே னின்மலனேநின்னடிக்கே
வாசஞ்செயவிரஙகி வாவென்றாலாகாதோ 9

என்னறிவுக்குள்ளே யிருந்ததுபோலையாவே
நின்னறிவுனினுடன்யா னிற்கவைத்தாலாகாதோ.

ஆதிபிரானேயென் னல்லலிருளகலச்
சோதிபரகாசமய நோன றுவித்தாலாகாதோ. 11

ஆசைச்சுழற்கடலி லாழாமலையாநின்
நேசப்புணைத்தா ணிறுத்தினாலாகாதோ. 12

பாசநிகளங்களெல்லாம் பஞ்சாகச்செஞ்செவே
யீசவெனை வாவென் றிரங்கினாலாகாதோ 13

ஓயாவுளனைபா யுருகிவாய்விட்டரற்றிச
சேயாகியெந்தைநின்னைச் சேரவைத்தாலாகாதோ

ஆதிபார்வாழ்வா யகண்டிதமாய்நின்றபரஞ்
சோதிநீயென்னைத் தொழும்பனென்றாலாகாதோ

விண்ணாரக்கண்ட விழிபோற்பரஞ்சோதி
கண்ணாரநின்னிறைவைக் காணவைந்தாலாகாதோ

சோராமற்சேர்ந்துநின்ற சின்மயனேநின்மயத்தைப
பாராமற்பாரெனநீ பக்ஷம்வைத்தாலாகாதோ. 17

கண்ணாடிபோலவெல்லாங் காட்டுந்திருவருளை
உண்ணாடியையா வுருகவைத்தாலாகாதோ. 18

மூலவிருள்கால்வாங்க மூதறிவுதோன்றவருட்
கோலம்வெளியாகவெந்தை கூடுவித்தாலாகாதோ.

சாற்றரியவின்பவெள்ளந் தானருமதினீமுனைக்கி
லூற்றமுருமென்னவதிலுண்மைசொன்னாலாகாதோ.

கையுங்குவித்திரண்டு கண்ணருவிபெய்யவரு
ளையனின்றாட்கீழே யடிமைநின்றாலாகாதோ. 21

திருச்சிற்றம்பலம்.

---

## இல்லையோவென்கண்ணி.

ஏதுந்தெரியா தெனைமறைத்தவல்லிருளை
நாதநீநீக்கவொரு ஞானவிளக்கில்லையோ 1

பணியற்றுநின்று பதைப்பறவென்கண்ணூண்
மணியொத்தசோதியின்ப வாரியெனக்கில்லையோ. 2

எம்மாலறிவதற வெம்பெருமான்யாதுமின்றிச்
சும்மாவிருக்கவொரு சூத்திரந்தானில்லையோ 3

நாய்கதுங்கடையானே னுதாநின்னின்பமயம்
வாயக்கும்படியினியோர் மந்திரந்தானில்லையோ. 4

ஊனுகநிற்கு முணர்வைமறந்தையாநீ
தானாகநிற்கவொரு தந்திரந்தானில்லையோ. 5

அல்லும்பகலு மகண்டவடிவேயுனைநான்
புல்லும்படியெனக்கோர் போதனைதானில்லையோ. 6

திருச்சிற்றம்பலம்.

## வேண்டாவோ வென்கண்ணி.

கண்டவடிவெல்லாநின் காட்சியென்றே கைகுவித்துப், பண்டுமின்று நின்றவென்னைப் பரிதவிக்க வேண்டாவோ 1

வாதனையோடாடு மனப்பாம்புமாயவொரு
போதனைதந்தையா புலப்படுத்த வேண்டாவோ 2

தன்னையறியத் தனியறிவாய்நின்றருளு
நின்னையறிந்தென்னறிவை நீங்கிநிற்கவேண்டாவோ

அள்ளக்குறையா வகண்டிதானந்தமெனும்
வெள்ளமெனக்கையா வெளிப்படுத்தவேண்டாவோ.

அண்டனேயண்ட ரமுதேயென்னுருயிரே, தொண்டனேற்கின்பந் தொகுத்திரங்கவேண்டாவோ 5

பாராதேநின்று பதையாதேசும்மாதான்
வாராயெனவும் வழிகாட்ட வேண்டாவோ. 6

திருச்சிற்றம்பலம்.

## நல்லறிவேயென்கண்ணி.

எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க, கண்ணிறைந்தசோதியைநாங் காணவா நல்லறிவே. 1

சித்தான நாமென்சடத்தை நாமென்னவென் றுஞ்
சத்தானவுண்மைதனைச் சாரவாநல்லறிவே. 2

அங்குமிங்குமெங்குநிறை யற்புதனைப்பொற்பறிந்து
பங்கயபத்துள்வண்டாய்ப் பயனபெறவாநல்லறிவே.

கான்றசோறென்னவிந்தக் காசினிவாழ்வுதன்னையுந்
தோன்றவருள்வெளியிற் றோன்றவாநல்லறிவே 4

திருச்சிற்றம்பலம்.

## பலவகைக்கண்ணி.

என்னரசேகேட்டிலையோ வென்செயலோவேதுமில்லை
தன்னரசநாடாகித் தத்துவங்கூத்தாடியதே. 1

பண்டொருகானின்பாற் பழக்கமுண்டோ வெந்
தைதனைக், கண்டொருகாற்போற்றக் கருத்துங்கரு
தியதே 2

வேறு.

கண்டனவேகாணுமன்றிக் காணுவேகாணுமென்
கொண்டறிவேனெந்தைதனைக் கூடுங்குறிப்பினையே 3

கல்லாலடியில்வளர் கற்பகமேயென்னளவோ
பொல்லாவினைக்குப் பொருத்தந்தான்சொல்லாயே. 4

தப்பிதமொன் றின்றியது தானாகநிற்கவுண்மை
செப்பியதுமல்லாமலென் சென்னியதுதொட்டனையே.

வேறு.

மாசானநெஞ்சினிவன் வஞ்சனென்றேவாய்திறந்து
பேசாமௌனர் பெருமான்படைத்ததுவே 6

கற்பதெல்லாங் கற்றேமுக் கண்ணுடையாய் நின்
பணியாய் நிற்பதுகற்றன்றோ நிருவிகற்பமாவதுவே.

முன்னைவினைக்கன்ம முயன்றனிவனென்றே
வென்னைவளவிலெந்தா யிரங்காதிருந்ததுவே. 8

வேறு.

நெஞ்சகர்வேறாகி நினைக்கூடவெண்ணுகின்ற
வஞ்சகனுக்கின்பமெந்தாய் வாய்க்குமாறெவ்வாறே.

வேறு.

பள்ளங்கடோறும் பரந்துபுனல்போலுலகி
லுள்ளம்பரந்தா லுடையாயென்செய்வேனே. 10

முன்னினைக்கப்பின்மறைக்கு மூடவிருளாகெடுவே
னென்னினைக்கவென்மரகத வெந்தைபெருமானே.

வல்லாளாமோறுநின் வான்கருணையென்னிடத்தே
யில்லாதேபோறு னெவ்வண்ணமுய்வேனே. 12

வேறு.

வாக்குமனமுமவுனமுற வெந்தைநின்னை
நோக்குமவுனமிந்த நாலறிவிலுண்டாமோ 13

ஒன்றாய்ப்பலவா யுலகமெங்குந்தானேயாய
நின்றுயையாவெனை நீ நீங்கற்கெளிதாமோ 14

ஆவித்துணையே யருமருந்தேயென்றனை நீ
கூவியழைத்தின்பங் கொடுத்தாற்குறைவாமோ 15

எத்தனையோ நின்விளையாட் டெந்தாய்கே ளிவ்
வளவென், றத்தனையுமென்று லறியுந்தரமாமோ. 16

தேடுவார்தேடுஞ் சிவனேயோநின்றிருத்தாள்
கூடுவான்பட்டதுயர் கூறற்கெளிதாமோ 17

வேறு.

பற்றினதைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற்கேவ
லத்தி, லுற்றவிடுநெஞ்சமுனை யொன்றிநிற்பதெப்ப
டியோ. 18

ஒப்பிலாவொன்றேநின் னுண்மையொன்றுங் காட்
டாமற், பொய்ப்புவியை மெயபோற் புதுக்கிவைத்த
தென்னேயோ. 19

காலாலவழிதடவுங் காலத்தேகண்முளைத்தாற்
போலேயெனதறிவிற் போந்தறிவாயநில்லாயோ 20

தன்னரசுநாடாஞ் சடசாலபூமிமிசை
யென்னரசேயென்னை யிறையாகநாட்டினையோ 21

வேறு.

திங்களமுதாநின் றிருவாக்கைவிட்டரசே
பொங்குவிடமனைய பொய்ந்நூல்புலம்புவனோ. 22

உன்னவுன்ன வென்னையெடுத் துள்விழுங்கு நின்னிறைவை, யின்னமின்னங்காணமலெந்தாய் சுழல்வேனோ 23

ஆராவமுதனைய வானந்தவாரியென்பாற்
றூராமலையா நீ தள்ளிவிடவந்ததென்னோ 24

திருச்சிற்றம்பலம்.

---

நின்றநிலை.

நின்றநிலையேநிலையாவைத் தானந்த
நிலைதானே நிருவிகற்பநிலையுமாகி
யென்றுமழியாதவின்பவெள்ளந்தேக்கி [தோ
யிருக்கவென்னைத்தொடர்ந்து தொடர்ந்திழுக்குமந்
இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமதி
யிதயமுங்கைகாட்டெனவேயிதயத்துள்ளே

ஒருக்காலேயுணர்ந்தவர்கட்கெக்காலுந்தா
னொழியாதவின்பவெள்ளமுலவாநிற்கும் 2

கற்றதுங்கேட்டதுந்தானேயதுக்காகக
கட்டபடமென்றருட்டுதற்கோகல்லாலெம்மான்
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு
குணங்குறியற்றின்பநிட்டைகூடான்றே. 3

திருச்சிற்றம்பலம்.

---

## பாடுகின்றபனுவல்

பாடுகின்றபனுவலோர்க
டேடுகின்றசெல்வமே
நாடுகின்றஞானமன்றி
லாடுகின்றவழகனே. 1

அக்லனென்றநின்னையே
பக்திசெய்துபனுவலால்
பித்தனின்றுபேசவே
வைத்ததென்னவாரமே 2

சிந்தையன்புசேரவே
நைந்துநின்னைநாடினேன்
வந்துவந்துளின்பமே
தந்திரங்குதாலுவே 3

அண்டரண்டம்யாவுநீ
கொண்டுநின்றகோலமே

தொண்டர்கண்டுசொரிகணீர்
கண்டநெஞ்சுகரையுமே. 4

அன்னைபோலவருண்மிகுத்து
மன்னுஞானவரதனை
என்னையேயெனக்களித்த
நின்னையானுநினைவனே. 5

திருச்சிற்றம்பலம்.

---

## ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்பு - சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதியநாதியுமாகி எனக்
கானந்த மாயறி வாய்நின் றிலங்குஞ்
சோதிமௌனியாய்த்தோன்றி அவன்
சொல்லாதவார்த்தையைச்சொன்னாண்டிதோழி
சங்கர சங்கர சம்பு. 1

சொன்னசொல்லேதென்றுசொல்வேன் என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மா விருத்தி
முன்னிலை யேதுமில் லாதே சுக
முற்றச்செய்தேயென்னைப் பற்றிக்கொண்டாண்டி
சங்கர சங்கர சம்பு. 2

பற்றியபற்றறவுள்ளே தன்னைப்
பற்றச்சொன்னான்பற்றிப் பார்த்தவிடத்தே

பெற்றதை யேதென்றுசொல்வேன் சற்றும்
பேசாத காரியம் பேசினான் றோழி
சங்கர சங்கர சம்பு 3

பேசா விடும்பைகள் பேசிச சுத்தப்
பேயங்க மாகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத் துரத்தி ஐய
னடிப்பிணைக்கீழே யடக்கிக்கொண்டாண்டி
சங்கர சங்கர சம்பு 4

அடக்கிப்புலனைப்பிரித்தே அவ
னாகிய மேனியி லன்பை வளர்த்தேன்
மடக்கிக்கொண்டா னென்னைத் தன்னுட் சற்றும்
வாய்பேசா வண்ண மரபுஞ்செய தாண்டி
சங்கர சங்கர சம்பு. 5

மரபைக் கெடுத்தனன் கேட்டேன் இத்தை
வாய்விட்டுச சொல்லிடின் வாழ்வெனக்கில்லை
கரவு புருடனு மலலன் என்னைக்
காக்குந் தலைமைக் கடவுள்காண் மின்னே
சங்கர சங்கர சம்பு. 6

கடலின் மடைவிண்ட தென்ன இரு
கண்களுமானந்தக் கண்ணீர் சொரிய
உடலும் புளகித மாக என
துள்ள முருக வுபாயஞ்செய் தாண்டி
சங்கர சங்கர சம்பு. 7

உள்ளது மில்லது மாய்முன் உற்ற
னுணாவது வாயுன் னுளங்கண்டதெல்லாம்
தள்ளெனச் சொல்லியென் னையன் என்னைத்
தாஞங்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி
சங்கர சங்கர சம்பு 8

பாராதி பூதநீ யல்லை உன்னிப்
பாரிந்தி ரியங்க ரணநீ யல்லை
யாரா யுணாவுநீ யென்றான் ஐய
னன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழி
சங்கர சங்கர சம்பு. 9

அன்பருக் கன்பான மெய்யன் ஐய
னைந்த மோன னருட்குரு நாதன்
தன்பாதஞ் சென்னியில் வைத்தான் என்னைத்
தானறிந் தென்மனந் தானிறந் தேனே
சங்கர சங்கர சம்பு 10

இறப்பும் பிறப்பும் பொருந்த எனக்
கெவ்வண்ணம்வந்ததென் றெண்ணியான்பார்க்கின்
மறப்பு நினைப்புமாய் நின்ற வஞ்ச
மாயா மனத்தால் விளைந்தது தோழி
சங்கர சங்கர சம்பு. 11

மனதே கல்லாலெனக் கன்றே தெய்வ
மௌன குருவாகி வந்துகை காட்டி

னநாம் பணியற மாற்றி அவ
னின்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி
சங்கர சங்கர சம்பு 12

அருளா லெவையும்பா ரென்றான் அத்தை
யறியாதேசுட்டியென் னறிவாலேபார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லாற் கண்ட
வென்னையுங்கண்டில னென்னேடி தோழி
சங்கர சங்கர சம்பு. 13

என்னையுந் தன்னையும் வேறா உள்ளத்
தெண்ணாத வண்ண மிரண்டற நிற்கச்
சொன்னது மோவொரு சொல்லே அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தையென்சொல்வேன்
சங்கர சங்கர சம்பு. 14

விளையுஞ் சிவானந்த பூமி அந்த
வெட்ட வெளிநண்ணித் துட்ட விருளாங்
களையைக் களைந்துபின் பார்த்தேன் ஐயன்
களையன்றி வேறொன்றுங் கண்டிலன் றோழி
சங்கர சங்கர சம்பு. 15

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை இரு
கண்காண நீங்கவுங் கண்டோந் துயிறான்
கொண்டார்போற் போனாலும் போகும் இதிற்
குணமேது நலமேது கூறாய்நீ தோழி
சங்கர சங்கர சம்பு. 16

நலமேது மறியாத வென்னைச் சுத்த
நாதாந்த மோனமா நாட்டந்தந் தேசஞ்
சலமேது மில்லாம லெல்லாம் வல்லான்
றனாலென் றலைமீது தாக்கினான் றோழி
சங்கர சங்கர சம்பு 17

தாக்குநல லானந்த சோதி அணு
தன்னிற் சிறியவென் னைத்தன் னருளாற்
போகரு வரவற் றிருக்குஞ் சுத்த
பூரண மாக்கினான் புதுமைகாண் மின்னே
சங்கர சங்கர சம்பு 18

ஆக்கி யளித்துத் துடைக்குந் தொழி
லத்தனை வைத்துமெள் ளத்தனை யேனுந்
தாக்கற நிற்குஞ் சமர்த்தன் அந்த
சாந்நிதியை சிந்திக்கத் தக்கது தோழி
சங்கர சங்கர சம்பு. 19

சிந்தை பிறந்தது மாங்கே அந்தச்
சிந்தை யிறந்து தெளிந்தது மாங்கே
எந்த நிலைகளு மாங்கே கண்ட
யான்றா னிரண்டற் றிருந்தது மாங்கே
சங்கர சங்கர சம்பு. 20

ஆங்கென்று மீங்கென்று முண்டோ சச்சி
தானந்த சோதி யகண்ட வடிவாய்

ஓங்கி நிறைந்தது கண்டாற் பின்ன
ரொன்றென் றிரண்டென் றுரைத்திடலாமோ
சங்கர சங்கர சம்பு. 21

என்று மழியுமிக் காயம் இத்தை
யேதுகரு மெய்யென் றிருந்தீ ருலகீர்
ஒன்று மறியாத நீரோ யம
னோலைவந் தாற்சொல்ல வுத்தர முண்டோ
சங்கர சங்கர சம்பு. 22

உண்டோ நமைப்போல வஞ்சர் மல
மூறித் ததும்பு முடலைமெய் யென்று
கொண்டோ பிழைபபதிங் கையோ அருட்
கோலத்தைமெய்யென்று கொள்ளவேண்டாவோ
சங்கர சங்கர சம்பு. 23

வேண்டா விருப்பும் வெறுப்பும் அந்த
வில்லங்கத் தாலே விளையுஞ் சனனம்
ஆண்டா னுரைத்த படியே சற்று
மசையா திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே
சங்கர சங்கர சம்பு. 24

அறிவாருமில்லையோ வையோ என்னை
யாரென் றறியாத வங்கதே சத்தில்
வறிதேகா மத்தீயிற் சிக்கி உள்ள
வான்பொருள் டோற்கவோ வந்தேனென் றோழி
சங்கர சங்கர சம்பு. 25

வந்த வரவை மறந்து மிக்க
மாதர்பொன் பூமி மயக்கத்தி லாழும்
இந்த மயக்கை யறுக்க எனக்
கெந்தைமெய்ஞ்ஞான வெழில்வாள்கொடுத்தான்
சங்கர சங்கர சம்பு 26

வாளாருங் கண்ணியர் மோகம் யம
வாதைக் கனலை வளர்க்குமெய் யென்றே
வேளா னவனுமெய் விட்டான் என்னின்
மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி
சங்கர சங்கர சம்பு. 27

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம் சுத்த
வெயின்மஞ்ச ளென்னவே வேதாகமங்கள்
மதிக்கு மதனை மதியார் அவர்
மாசகசுந்தன் மாசகசுந்தன் மார்க்க மேமாமே
சங்கர சங்கர சம்பு. 28

துன்மார்க்க மாதர்மயக்கம் மனத்
தூயர்க்குப் பற்றுது சொன்னோன்சனகன்
சன்மார்க்க நீதிவிட்டாந்தம் அவன்
றனந்த மான சதானந்த னன்றோ
சங்கர சங்கர சம்பு. 29

அன்றென்று மாமென்று முண்டோ உனக்
கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே

நின்றாற் றெரியு மெனவே மறை
நீதியெம் மாதி நிகழ்த்திஞன் ரேழி

சங்கர சங்கர சம்பு - சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

திருச்சிற்றம்பலம்.

---

## அகவல்.

திருவருண்ஞானஞ்சிறந்தருள்கொழிக்குங்
குருவடிவானகுறைவிலாநிறைவே
நின்றவொன்றேநின்மலவடிவே
குன்றப்பொருளேகுணப்பெருங்கடலே
யாதியுமந்தமுமானந்தமயமாஞ்
சோதியேசத்தேதொலைவிலாமுதலே
சீர்மலிதெய்வத்திருவருளதனாற்
பார்முதலண்டப்பரப்பெலாநிறுவி
யண்டசமுதலாமெண்டருநால்வகை
எழுபிறவியிற்றாழாதோங்கு
மனந்தயோனியினினம்பெறமல்க
வணுமுதலசலமானவாக்கையுங்
கணமுதலளவிற்கற்பகாலமுங்
கன்மப்பகுதித்தொன்மைக்கிடா
விமைப்பொழுதேனுந்தமக்கெனவறிவிலா
வேழையுயிர்த்திரள்வாழவமைத்தனை
எவ்வுடலெடுத்தாரவ்வுடல்வாழ்க்கை

இன்பமெனவே துன்பமிலையெனப்
பிரியாவண்ணமுரிமையின்வளர்க்க
வாதரவாகக்காதலுமமைத்திட்
டேகமின்றியேயேகனெனவே
வறிவுபோலறியாமையியக்கிக்
காலமுங்கன்மமுங்கட்டுங்காட்டிப்
மேலுநரகமுமேதகுசுவர்க்கமும்
மாலறவகுத்தனையேலும்வண்ண
வமையாக்காதலிற்சமயகோடி
யறம்பொருளாதிதிறம்படநிலையிற்
குருவாயுணர்த்தியொருவர்போலனைவரும்
தத்தநிலையேமுத்திமுடிவென
வாதத்தர்க்கமும்போதநூல்கரு
நிறைவிற்காட்டியேகுறைவின்றிவபங்க
வங்கங்குநின்றனையெங்குமாகிச்
சமயாதீதத்தன்மையாகி
இமையோர்முதலியயாவருமுனிவருந்
தம்மைக்கொடுத்திட்டெம்மையாளென
வேசற்றிருக்கமாசற்றஞான
நலமுங்காட்டினைஞானமிலைற்கு
நிலையுங்காட்டுதனின்னருட்கடனே

திருச்சிற்றம்பலம்.

வண்ணம்.

தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
—தானதனதனதானதனன.

அருவென் பனவுமன்றி உருவென் பனவுமன்றி
அகமும் புறமுமன்றி—முறைபிறழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப—விமலமதாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று—ளறிவினர்காண
—ஞானவெளியிடைமேவுமுயிராய். ()

அனலொன் றிடவெரிந்து புகைமண்டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து—மடிவிலதாதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றோ—ரியல்பினதாகும்
அவனென் பதுவுமன்றி அவளென் பதுவுமன்றி
அதுவென பதுவுமன்றி—யெழில்கொடுலாவு
—மாருநிலையறியாதபடியே. (வ)

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
ஏவையுந் தனுளடங்க—வொருமுதலாகு

முளதென் பதுவுமன்றி யிலதென் பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த—வயன்முதலோர்கள்
மவுருவ கவலைகொண்டு சமயங் களில்விழுந்து
சுழலும் பொழுதிரங்கி—யருள்செயுமாறு
—கூறரியசகமாயையறவே. ()

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளின்றி
மறிவொன் றெனவிளங்கு—முபயமதாக
வறியுந் தரமுமன்றி பிறியுந் தரமுமன்றி
வசரஞ் சரமிரண்டி—னொருபடியாகி
எதுசந் ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள்—சுகவடிவாகும்
—யாதுபரமதைநாடியறிநீ. (௭)

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து—கெடுநினைவாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமன்றி—யவரிதழூறல்
பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
புகலும் படிதுணிந்து—குழல்முகாக
—மாலைவகைபலசூடியுடனே. ()

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று—கலிலெனுவாடுஞ்

சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கு
மொலிநன் றெனமகிழ்ந்து—செவிகொளாநாசி
பசுமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகுந்து
பவமஞ் சிடவிறைஞ்சி—வரிசையினாடு
—காலின்மிசைமுடிசூடிமயலாய். (௯)

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க—விரணமதான
வளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று—பரவசமாகி
மருவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த—படிமதிசோர
—வானரமதெனமேனிதிரையாய். ()

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதியென்று
வரவுஞ் செயலழிந்து—விருமலுமாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ்சுடர்களின்று
முரமுங் கனைகளின்று—சரியெனநாடி
மனையின் புறமிருந்த் தினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட—யமன்வரும்வேளை
—ஏதுதுணை பழிகாரமனமே. (க)

ஆக பாடல் - 1452.

தாயுமானசுவாமிகள்பாடல்

முற்றிற்று.

# அருள்வாக்கிய அகவல்.

இஃது தாயுமானசுவாமிகளுடைய

மாணாக்கராகிய

**அருளையரென்பவர்**

மேற்படி சுவாமிகளைத் துதிசெய்தது.

திருவளாகருணைச்சிவானந்தபூரண
மொருவருமறியாவொருதனிச்சித்து
நவந்தருபேதமாயநாடகநடித்துற்
பவந்தனைநீக்கிப்பரிந்தருள்பராபரங்
கண்ணுங்கருத்துங்கதிரொளிபோல
நண்ணிடவெனக்குநல்கியநன்மை
யொன்றாய்ப்பலவாயொப்பிலாமோனக்
குன்றாய்நிறைந்தகுணப்பெருங்குன்ற
மண்ணையும்புனலையும்வளியையுங்கனலையும்
விண்ணையும்படைத்தளித்திலாவித்துப்
பந்தமனைத்தையும்பாழ்படநூறியென்
சிந்தையுட்புகுந்தசெழுஞ்சுடர்ச்சோதி
விள்ளொணாஞானம்விளங்கியமேலோர்
கொள்ளைகொண்டுண்ணக்குறைவிலாநிறையு
தாட்டாமறைமலர்த்தாணினைப்பவர்க்குக்
காட்டாவின்பங்காட்டியகதிநிலை
வாக்கான்மனத்தான்மதித்திடவரிதென
நோக்காதிருக்கநோக்கியநோக்க
மாதியாயறிவாயகண்டமாயகண்ட
சோதியாய்விரிந்துதுலங்கியதோற்றம்

பரவெளிதன்னிற்பதிந்தவென்னுளத்தின்
விரவிவிரவிமேற்கொளும்வெள்ளஞ்
சுட்டுககடங்காச்சோதியடியார்
மட்டுக்கடங்கும்வான்பெருங்கருணை
யெல்லைக்கடங்காவேகப்பெருவெளி
தில்லைப்பொதுவிற்றிருநடத்தெய்வர்
வாதவூரெந்தையைவரிசையாயவிழுங்கும்
போதவூர்மேவுகர்பபூரவிளக்குச
சுகரையகண்டக்தூவெளியெல்லாந்
திகழவேகாட்டுஞ்சின்மயசாக்ஷி
செழுந்தமிழ்ப்பரைச்சிவலிங்கமாகி
விழுங்கியஞானவித்தகவேழ
மெழிற்றிருபட்டினத்திறைவரையென்று
மழிவிலாவிலிங்கமாக்கியவனாதி
சாந்தபூமிதண்ணருள்வெள்ள
மார்ந்தநீழலசையாககனம்
பரவுவார்நெஞ்சிற்பரவியமாட்சி
யிரவுபகலற்றவேகாந்தக்காட்சி
யாட்சிபோலிருக்குமகிலந்தனக்குச்
சாக்ஷியாயிருக்குந்தாரகத்தனிமுத
வாணும்பெண்ணுமலியுமல்லாததோர்
தாணுவாய்நின்றசத்தாந்தனிச்சுட
ரெள்ளுமெண்ணெயுமெப்படியப்படி
யுள்ளும்புறம்புமுலாவியவொருபொரு
ளளவிலாமதந்தொறுமவரவர்பொருளென

வுளநிறைந்திருக்குமொருபொற்பணதி
துள்ளுமனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளுமோனவாள் கொடுத்திடுமரசு
பெரியபேறும்பேசாப்பெருமை
யரியவுரிமையளவிலாவளவு
துரியநிறைவுந்தோன்றுவதீதம்
விரியுநல்லன்புவிளைத்திடும்விளைவு
தீராப்பிணியாஞ்செனனமறுக்க
வாராவரவாய்வந்தசஞ்சீவி
யாலைக்கரும்புபாதமுதக்கட்டிநீள்
சோலைக்கனிபலாச்சுளைகதலிக்கனி
பாங்குறுமாங்கனிபாறேன்சருக்கரை
யோங்குகற்கண்டுசேர்த்தொன்றாய்க்கூட்டி
யருந்தியரசமெனவறிஞர்சமாதியிற்
பொருந்தியவின்பம்பொழிசிற்சுகோதய
மெங்கணுநிறைந்தவியல்பினையெனக்குச்
செங்கையால்விளங்கத்தெரித்தமெய்த்தேசிகன்
தன்னையறிவித்துத்தற்பரமாகி
யென்னுளத்திருந்தருளேகநாயக
னடிமுடியில்லாவரும்பொருடனக்கு
முடியடியிதுவெனமொழிந்திடுமுதல்வன்
மெய்யலான்மற்றவைமெய்யலவெல்லாம்
பொய்யெனவறிவெனப்புன்னகைபுரிந்தோ
னருளும்பொருளும்பேதமாயிருந்து
மிருதிறனென்னுமியலுமன்றென்றே

னருளுணக்குண்டேலருளும்வெளிப்படும்
பொருண்மையுந்தானே பொருந்துமென்றுரைத்தோன்
சத்தசத்திரண்டுதன்மையுந்தானே
யொத்தலாற்சதசத்துனக்கெனவுரைத்தோ
ன[illegible]வமறவிடினருளுறுமென்னக்
காணருநேர்மையாற்காணவேயுரைத்தோன்
றொன்மமுள்ளளவுந்தீராதிழுக்குங்
கன்மம்விடாதெனக்காட்டியவள்ளலு
ளுளதிலதெனவுமுறுதலான்மாயை
வளமிலதெனவும்வகுத்தினிதுரைத்தோ
னில்லறத்திருந்துமிதயமடங்கிய
வல்லவன்றானேமகாயோகியென்றோன்
றுறவறத்திருந்துஞ்சூழ்மனக்குரங்கொன்
றறவகைபறியானஞ்ஞானியென்றோ
னிறவாமனந்தானிறக்கவுணர்த்திப்
புறவாவரந்தரும்பேரறிவாள
னந்தனதருளாலனைத்தையுமியக்குஞ்
சுத்தமாமாயையின்றோற்றமென்றுரைத்தோ
னிருண்மலமகலவிசைந்ததிலழுத்தும்
பொருளருட்டிரோதைப்பொற்பெனப்புகன்றோன்
வீறுசிவமுதல்விளம்பியபடியே
யாறுமனாதியென்றறிஞருக்குரைப்போன்
கொல்லாவிரதங்குவலயத்தோர்க
ளெல்லாம்பெறுமினென்றியம்பியதயாநிதி
தருமமுந்தானேயுந்தவமும்புரிபவர்க்

குரிமையாயவரோடுறவுகலப்பவன்
றன்னுயிர்போலத்தரணியின்மருவிய
மன்னுயிரனைத்தையும்வளர்த்திடும்வேந்தன்
களவுவஞ்சனைகள்செய்கருமிகடமக்குந்
தெளிவுவந்துறவருள்செய்திடுந்திறத்தோன்
தான்பெறும்பேறுசகமெலாம்பெறவே
வான்பெருங்கருணைவழங்கியமாரி
தஞ்சமென்றடைந்ததாபததம்மை
யஞ்சலென்றருளுமறிஞர்சிகாமணி
சீவகோடிகளுஞ்சித்தர்கோடிகளும்
யாவரும்புகழுயாவையுமுணர்ந்தோன்
யானெனதென்னுவிறைவனெம்பெருமான்
றனவனாகியதலைவனெங்கோமா
னருணகிரியார்க்காறுமுகன்சொலும்
பொருணலமல்லதுபொருளெனமதியான்
பூதமுதலாப்பொலிந்திடுநாத
பேதமுங்கடந்தபெருந்தகைமூர்த்தி
மூலாதாரமுதலாயுள்ள
மேலாதாரமும்வெறுவெளிகண்டவன்
மண்டலமூன்றினுமன்னியவுருவினுங்
கண்டவையத்தினுங்கடவுளாய்நின்றோன்
பகர்சமயந்தொறும்பரமேயிருந்து
அகநடம்புரியுந்தொழிலெனச்சொன்னோன்
பேதவபேதபேதாபேத
போதமிதுவெனப்புகன்றிடும்புண்ணிய

னதுநாளெனவேயாற்றிடுமனுபவஞ்
சதுர்வேதாந்தந்தன்மையென்றுரைத்தோ
னல்லும்பகலுமறிவானோர்கருச்
சொல்லும்பொருளுஞ்சுவையெனச்சொன்னோன்
சுதனேகுருவாஞ்சுவாமிநாயகற்கெனி
னதிகமெய்ஞ்ஞானமல்லவோவென்றோ
னேசயோகத்துறநிருபரெல்லாந்தொழு
மிராசயோகந்திறையிராசயோகத்தான்
பொறுமைதெளிவுபுனிதவாசார
மறுவிலாவண்மைவாரமியற்கை
தண்ணமர்சாந்தந்தயங்கியகீர்த்தி
யெண்ணெனக்கலைபயிலிணையிலாக்கல்வி
நல்லவிரக்கநடுநிலைசத்திய
மில்லையென்னுமலெவர்கருந்தருங்கொடை
நற்குணமெல்லா நண்ணியபெருந்தகை
சிற்குணவாரிதிருவருட்செல்வன்
கர்மேலெடுத்துக்கருத்துறவணங்கிப
பரமேயுனக்குபபரமெனப்பகர்ந்தோ
னலடிமேவுமரசினையடுத்தே
சீலமெய்ஞ்ஞானநதெளிந்தனனெனவுஞ்
சித்தமௌனிதிடச்சித்தமாக
வைத்தநிலையின் வளர்ந்தனனெனவு
மூலன்மரபின்மூளைத்தமௌனிதன்
பாலன்யானெனவும்பரிவொடும்பகர்ந்தோன்
வடமொழியியற்கையின்மகிமையையுணர்ந்து

திடமுறமுப்பொருட்டிறத்தையுந்தெளிந்து
கண்டமுதென்னககனிரசமென்னத்
தண்டமிழ்மாரிதன்னைப்பொழிந்து
சித்தியுமுத்தியுஞ்சிறந்தருள்கொழிக்கு
நித்தியநிரஞ்சனநிராலம்பநிறைவைப்
பாடியுநாடியும்பணிந்தெழுந்தன்பா
லாடியுமரற்றியுமகங்குழைவெய்தியு
முடலங்குழையவுரோமஞ்சிலிர்ப்பப்
படபடென்றுள்ளம்பதைத்துபபதைத்துப்
பாங்குறநெட்டுயிரப்பாகிப்பரதவித்
தேங்கியேங்கியிரங்கியிரங்கி
யோய்ந்தபம்பரம்போலொடுங்கியேசிறிது
மேய்ந்தவிழிகளிமைப்பதுமின்றிச்
சோர்ந்துசோர்ந்துதுவண்டுதுவண்டுமெய்
யார்ந்தவன்போடவாசமுற்றடிக்கடி
யுண்ணடுக்குறவேயுருகியேசற்றாக்
தண்ணமர்மொழியுந்தழுதழுத்திடவே
யுள்ளரும்புறம்புமொருமித்துருகி
வெள்ளநீர்போல்விழிநீர்பெருக்கிக்
கன்றுபசுவைக்கருதிக்கதறிச்
சென்றுசென்றோடித்திகைப்பதுபோல
வென்புநெக்குடையவிருகரங்குவித்துப்
புன்புலால்யாக்கைபொருந்தாதினியென
வுணர்ந்துணர்ந்தன்பர்யுவக்கமேற்கொண்டினிக்
கணப்பிரியேனெனக்கருதியேகுறித்துத்

திருவுருவெல்லாந் திருநீறிலங்க
விருகரனளினமியன் முடிகுவிந்துப்
பூரணசந்திரன் போலொளிகாட்டுங்
காரணவுதனமகவின் குறுவெயர்வுற
விளநிலாவெனவே யிலங்கியசிறுநகை
தளதளவென்னத் தயங்கியெழில்பெற
வித்தன்மையெல்லாமிசைந்துமிவனருள்
சித்தெனச்சிவகதிசேர்ந்தவருரைப்ப
பாத்திரமாடப்பரிவுடனுடிச
சாத்திரங்காட்டித்தயவுசெய்தருளும்
வல்லவனெனவேமன்னுயிர்க்காக
வெல்லையிலன்பனிவனெனவிளங்கி
யீனவுலகத்தியற்கைபொய்யென்றே
ஞானனூன்மெய்யெனநவின்றினிதிரங்கிக்
கேவலசகலங்கீழ்ப்படமேலாய்
மேவருஞ்சுத்தமெய்யினைநல்க
வருளேயுருவுகொண்டவனியில்வந்த
பொருளேயிவனெனப்பொலிந்திடும்புனிதன்
சைவஞ்சிவனுடன்சம்பந்தமென்பது
மெய்வளர் ஞானம்விளக்குமென்றிசைத்தோன்
கதிர்விழியொளியுறக்கலந்தசித்தாந்த
விதிமுறையாமெனவிளம்பியமேலோன்
முடிவினிலாகமமுறைமையினுண்மையை
யடியவர்க்குறித்துரைத்தருளியவண்ணல்
சிதம்பரரேர்ஷமுதிறமாவுரைத்திடை

பதம்பரவெனப்பகர்பரமமெய்ஞ்ஞானி
முத்திபஞ்சாக்கரமுறைமையிலயிக்கியஞ்
சத்தியமிதுவெனச்சார்ந்தவர்க்குரைத்தோ
னஞ்செழுத்துள்ளேயனைத்தையுங்காட்டியென்
னெஞ்சழுத்தியகுருநீதிமாதவ
னெல்லாநிறைந்தவிறைவன்செயலெனக்
கல்லாவெனக்குங்கருணைசெய்கடவுள்
குருவருளாலேகூடுவதல்லாற்
றிருவருண்ணுறுதெனத்தெரிந்திடவுரைத்தோன்
குருவுருவருளெனக்கொண்டபின்குறையாப்
பொருண்மயமாமெனப்புகன்றிடுபோத
னைந்தமூர்த்திகளையுமெழிற்குருவடிவெனச்
சிந்தையிற்றியக்கறத்தேர்ந்தவர்க்குரைத்தோன்
சதாசிவமென்றபேர்தான்படைத்ததுதா
னெதாவதேபொருளென்றெடுத்தெடுத்துரைத்
கல்லானைகன்னல்கவர்ந்திடச்செய்தவ [தோன்
னெல்லாம்வல்லசித்தெம்மிறையென்றே
னெவ்வுயிர்தோறுமிறைமேவியதிறஞ்
செவ்வியபிரம்படிசெப்பிடுமென்றே
னெவ்வணமெவரெவரிசைத்தனரவரவர்க்
கவ்வணமாவனெம்மானெனவறைந்தோ
னொருபாணனுக்கேயொருசிவனுட்படின்
வருமடியார்திறம்வழுத்தொணாதென்றோன்
சிவனடியாரைச்சிவனெனக்காண்பவ
னெவனவன்சிவனேயென்றெடுத்துரைத்தோன்

விருப்புவெறுப்பினைவேரறப்பரித்துக்
கருபபுகாதென்னைக்காத்தருள்செய்தோ
னிருசொல்லுரையாதியானின்பமெய்த
வொருசொல்லுரைத்தவுயர்குருபூதர
னத்துவாமார்க்கமாறையுமகற்றித்
தத்துவாதீதத்தன்மையைத்தந்தோன்
றிருமகண்மருவியதிகழ்வளமறைசையில்
வருமுணர்வாளன்பருளிலாமனத்தா
னெண்ணியவெண்ணமெல்லாந்தெரிந்தெனக்குற்
றண்ணருள்செய்தவன்றாயுமானவ
னொருமொழிபகர்ந்தவுதவியாலவன்ற
னிருபதமுப்போதிறைஞ்சிவாழ்த்துவனே.

அருள்வாக்கிய அகவல்-முற்றிற்று.

---

இக்கொச்சகங்கள் ஓர்பழைய பிரதியில் வண்ணத்தின் இடைஇடையில் காணப்படுகின்றன.

---

## கொச்சகம்.

தத்துவம்வேறென்னைவேறாக்கியருடந்ததிலே
உற்றுணர்வும்வேண்டாவென்றோரிரண்டுமுன்றினையும்
நித்தியமென்றேகாட்டிநில்லாமனில்லெனவே
தத்துவத்தோடொத்துவிதந்தருந்தாயுமானவனே. 1

நந்தமதென்றெண்ணிலிந்திடவுடல்வேறாக்கி
வந்தபொருளென்னதல்லவென்றெனதுவல்லமையும்
உந்தனக்கன்றெல்லாமதென்றேயுட்புகுந்த
தன்னையுமேற்றுமருளாந்தாயுமானவனே.

பந்தாடுமாபோற்பதிந்துகருப்பட்டேத்திருச்
சிந்தாமணியாய்ச்செகந்தனிலேதீவகம்போல்
வந்தான்மறைசைநகர்மற்றுமோர்மெய்கண்ட
சந்தானத்தானத்தவத்தாயுமானவனே. 3

தன்னைத்தானென்றினையுங் காட்டாதபேரிருளின், உன்னை
த்தான் கண்ணிலர்போ லொன்றாகித்தாளுழன்ற, என்னைத்
தானிவ்வணமென் றெண்ணறியர் வேழையென்றே, தன்னைத்
தான் றந்தாண்டான் றனித்தாயுமானவனே. 4

திடக்குப்பையாடரவஞ்செங்கட்கேழற்கோ
டுடுக்குப்பைநீத்தேயுயர்மறைசைவந்தெழுந்தே
விடக்குப்பைகோலால்விளங்கியபொய்மெய்யெனவாழ்
சடக்குப்பையென்றுதவிர்த்தான்றாயுமானவனே. 5

புகப்பட்டான்வல்லிருளின்பொல்லாதவேழாம்
பகப்பட்டானீங்காப்பரப்பானதீவினையின்
அகப்பட்டான்மாயாவிகாரவடவியெனுஞ்
சகப்பட்டானென்றிரங்கியாண்டான்றாயுமானவனே. 6

கஞ்சநெறிகாணாதகாரணமேயன்பருக்காப்
பஞ்சவன்முன்சோப்பரிமேலெழுந்தபாம்
மஞ்சுலவுஞ்சோலையின்மாமறைசைவந்தோக்கித்
தஞ்சமென்றார்கஞ்சலெனவாட்டாயுமானவனே. 7

மன்றக்கவலைதீர்த்தென்மயக்கவிகற்பங்களெல்லாம்
உனக்கலவென்றெவ்வொன்றும்வருங்கியொன்றுமற
நினைக்கவரிதானவின்பநிட்டையிதென்றேயுணர்த்தான்
தனக்குவமையில்லானெனக்குமருட்டாயவனே. 8

முற்றிற்று.

சிவமயம்.

தாயுமானசுவாமிகள்

# திருப்பாடலகராதி.

திருப்பாடலகராதி முற்றிற்று.